ஓம் சரவணபவ

1788

# ஸ்ரீ முருகன் துதிமாலை

## (முருகன் தோத்திரத் தொகுப்பு)

श्री मुरुगन् तुदिमालै (तमिल)




கீதா பிரஸ், கோரக்பூர் (உ.பி.)

ஓம் சரவணபவ

1788

# ஸ்ரீ முருகன் துதிமாலை

## (முருகன் தோத்திரத் தொகுப்பு)

श्री मुरुगन् तुदिमालै (तमिल्)

---

த்வமேவ மாதா ச பிதா த்வமேவ
த்வமேவ ப$_3$ந்து$_4$ஶ்ச ஸக$_2$ா த்வமேவ ।
த்வமேவ வித்$_3$யா த்$_3$ரவிணம் த்வமேவ
த்வமேவ ஸர்வம் மம தே$_3$வதே$_3$வ ॥

ஆருயிர் அன்னையும் நீயே, அருமைத் தந்தையும் நீயே,
உறவும் சுற்றமும் நீயே, உற்ற நண்பனும் நீயே,
கற்கும் கல்வியும் நீயே, சேர்க்கும் செல்வமும் நீயே,
அனைத்தும் ஆன என்றன் ஆதிதேவனும் நீயே!

---

கீதா பிரஸ், கோரக்பூர் (உ.பி.)

ஓம் சரவணபவ

# பதிப்பாளர் உரை

ஆன்மீக நூல்களை வெளியிடுவதில் *'கீதா பிரஸ், கோரக்பூர்'* நிறுவனம் 1923–ஆம் ஆண்டு முதல் சிறந்த சேவை செய்து வருகிறது. வடமொழியிலுள்ள ஸ்ரீமத் ராமாயணம், ஸ்ரீமத் பாகவதம், அத்யாத்ம ராமாயணம், ஸ்ரீமத் பகவத்கீதை, சுந்தரகாண்டம், ஸ்ரீமந் நாராயணீயம் போன்ற அரிய நூல்களைப் பல்லாயிரக்கணக்கான பக்தர்கள் பயன்பெறும் வகையில் தமிழில் (மூலம் மற்றும் விளக்கவுரையுடன்) வெளியிடப்பட்டுள்ளது.

தனிப்பெரும் தெய்வமாய் விளங்கும் *'தமிழ் கடவுள்'* எனப் போற்றப்படும் அழகன் முருகனின் அரிய தமிழ் தோத்திரங்களை வெளியிட்டு, தமிழறிந்த முருக பக்தர்கள் பயனடைய *'ஸ்ரீ முருகன் துதிமாலை'* என்ற இந்நூலை வெளியிடுகிறோம்.

இதில் வெளியிடப்பட்டுள்ள ஸ்ரீதேவராய சுவாமிகள் அருளிய *'கந்தர் சஷ்டி கவசம்'* முருக பக்தர்களுக்கு ஒரு வரப்பிரசாதம்; விரும்பியதைப் பெற்றுத் தரும் சக்தி வாய்ந்த பக்திப் பாடல். அதுபோல் ஸ்ரீசத்குரு சாந்தானந்த சுவாமிகள் அருளிய *'ஸ்ரீ ஸ்கந்தகுரு கவசம்'* கலிதோஷம் நீக்கிடவல்லது. சங்கப்புலவர் ஸ்ரீநக்கீரதேவரால் இயற்றப்பட்ட *'திருமுருகாற்றுப்படை'* முருகனின் ஆறுபடை வீட்டைத் துதிப்பதோடு, அரக்கனால் சிறைபிடிக்கப்பட்டோரைச் சிறை மீட்ட வரலாற்றுப் பெருமை உடையது. இதைப் பக்தியுடன் பாராயணம் செய்வோர் எத்தகைய இடையூறுகளையும் களைந்து வெற்றி பெறுவது கண்கூடு.

முருகனடியார்களில் தனிப்பெருமை வாய்ந்தவர் ஸ்ரீஅருணகிரிநாதர். அவர் இயற்றிய ***‘கந்தர் அலங்காரம்’*** கவிநயமும், சொல்லழகும், மனதை உருக்கும் பக்திச் சுவையும் மிக்கது. மேலும், அவர் இயற்றிய ***‘கந்தர் அனுபூதி’*** அவர் தம் அத்வைத அனுபவத்தை முழுவதுமாகப் பிழிந்து தருகிற ஓர் அற்புத வேதாந்தமும், பக்தியும் இணைந்த தோத்திரமாகும்.

மேலும், சமீபத்தில் யோகியாக வாழ்ந்த ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் அருளிய ***‘திருச்செந்தூர் கந்தர் கலிவெண்பா’*** என்ற தோத்திரமும், ஸ்ரீவள்ளலார் அருளிய ***‘தெய்வமணி மாலை’*** என்ற தோத்திரமும் மற்றும் பாம்பன் ஸ்ரீகுமரகுருதாச சுவாமிகளின் ***‘சண்முக கவசம்’*** என்ற தோத்திரமும் இத்தொகுப்புக்கு அணிசெய்வனவாகும்.

இந்த தோத்திரத் தொகுப்பு, முருகனடியார்களின் வரவேற்பைப் பெறுவதோடு, படிப்போர்க்கு முருகன் அருளையும் பெற்றுத் தரும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

இப்புனித ***‘ஸ்ரீ முருகன் துதிமாலை’*** எனும் தொகுப்பை முருக பக்தர்கள் அனைவரும் படித்து கந்தனது அருள்பெற வேண்டும் என்பதே எங்கள் விருப்பம்.

***‘கந்தன் கழலிணை எண்ணுக மனமே!’***

**— பதிப்பாளர்கள்**



ஓம் சரவணபவ

# தேவநாகரி எழுத்துக்கள்

ஒரு மொழியின் சொல்லை இன்னொரு மொழியின் எழுத்துக்களால் எழுதுவதை எழுத்துப்பெயர்ப்பு **(Transliteration)** என்று அழைக்கிறோம். ஒரு மொழியிலுள்ள சொல்லின் பொருளை மற்றொரு மொழியில் கூறுவதை மொழிபெயர்ப்பு **(Translation)** என்று அழைக்கிறோம்.

சம்ஸ்கிருதச் சொற்களைப் பிழையின்றி உச்சரிக்க, உதவியாக ஆங்கில எழுத்துக்களின் துணைகொண்டு *2, 3, 4* என்னும் குறியீடுகளுடன் சம்ஸ்கிருத எழுத்துக்களுக்கு நிகரான தமிழ் ஒலி வடிவங்கள் இங்கு தரப்பட்டுள்ளன.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| अ *அ* | आ *ஆ* | इ *இ* | ई *ஈ* | उ *உ* | ऊ *ஊ* | ऋ *ரி* |
| ॠ *ரீ* | ॡ ல்ரு | ए *ஏ* | ऐ *ஐ* | ओ *ஓ* | औ *ஔ* | |

| | | | | |
|---|---|---|---|---|
| क *க* **[ka]** | ख $க_2$ **[kka]** | ग $க_3$ **[ga]** | घ $க_4$ **[gha]** | ङ *ங* |
| च *ச* **[ca]** | छ $ச_2$ **[cha]** | ज *ஜ* **[ja]** | झ *ஜ* **[jha]** | ञ *ஞ* |
| ट *ட* **[ta]** | ठ $ட_2$ **[tta]** | ड $ட_3$ **[da]** | ढ $ட_4$ **[dda]** | ण *ண* |
| त *த* **[tha]** | थ $த_2$ **[thha]** | द $த_3$ **[dha]** | ध $த_4$ **[dhha]** | न *ந,ன* |
| प *ப* **[pa]** | फ $ப_2$ **[pha]** | ब $ப_3$ **[ba]** | भ $ப_4$ **[bha]** | म *ம* |
| य *ய* | र *ர* | ल *ல* | व *வ* | |
| स *ஸ* **[sa]** | ष *ஷ* **[sha]** | क्ष *க்ஷ* **[ksha]** | ह *ஹ* **[ha]** | |
| श *ஶ* **[s̄ā]** | ज्ञ க்ஞ **[gna]** | ऋ ரு **[ri]** | | |

*'ஶ'* ('श') என்னும் எழுத்து *'பிசகு'*, *'கசடு'* என்னும் சொற்களில் வரும் *'ச'*வைப் போன்று ஒலிக்கும். 'ரு' என்னும் எழுத்து எருது, விருது என்னும் சொற்களில் வரும் 'ரு'வைப் போல் ஒலிக்கும்.

சம்ஸ்கிருதச் சுலோகங்களில் சில இடங்களில் 'ऽ' அல்லது 'ऽऽ' என்னும் குறியீடுகளைக் காணலாம். இதற்கு *'அவக்$_3$ரஹம்'* என்று பெயர். இந்த இடங்களில் முறையே *'அ'*, *'ஆ'* என்னும் எழுத்துக்கள் தொக்கி நிற்கின்றன என்று பொருள் கொள்க.

ஓம் சரவணபவ

# பொருளடக்கம்

உ

ஓம் சரவணபவ

# ஸ்ரீ முருகன் துதிமாலை

## விநாயகர் துதி

பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை
நாலும் கலந்துனக்கு நான் தருவேன் – கோலஞ்செய்
துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீயெனக்கு
சங்கத் தமிழ் மூன்றும் தா.

– ஔவையார்



ஸ்ரீ தேவராய சுவாமிகள் அருளிய

## கந்தர் சஷ்டி கவசம்

### காப்பு

துதிப்போர்க்கு வல்வினைபோம், துன்பம்போம்,
நெஞ்சிற் பதிப்போர்க்குச் செல்வம் பலித்துக்—
கதித்தோங்கும் நிஷ்டையும் கைகூடும் நிமலர்
அருள்கந்தர் சஷ்டி கவசம் தனை.

அமரர் இடர்தீர அமரம் புரிந்த
குமரனடி நெஞ்சே குறி.

சஷ்டியை நோக்கச் சரவண பவனார்
சிஷ்டருக் குதவும் செங்கதிர் வேலோன்
பாதம் இரண்டில் பன்மணிச் சதங்கை
கீதம் பாடக் கிண்கிணி யாட
மையல் நடஞ்செய்யும் மயில்வா கனனார்
கையில்வே லால்எனைக் காக்கவென்று வந்து
வரவர வேலா யுதனார் வருக
வருக வருக மயிலோன் வருக

இந்திரன் முதலாய் எண்டிசை போற்ற
மந்திர வடிவேல் வருக வருக
வாசவன் மருகா வருக வருக
நேசக் குறமகள் நினைவோன் வருக
ஆறுமுகம் படைத்த ஐயா வருக
நீறிடு வேலவன் நித்தம் வருக
சிரகிரி வேலவன் சீக்கிரம் வருக
சரவண பவனார் சடுதியில் வருக
ரவண பவச ரரரர ரரர
ரிவண பவச ரிரிரிரி ரிரிரி
விணபவ சரகண வீரா நமோநம
நிபவ சரகண நிறநிற நிறனெ
வசர கணபவ வருக வருக
அசுரர் குடிகெடுத்த ஐயா வருக
என்னை யாளும் இளையோன் கையில்
பன்னிரண் டாயுதம் பாசாங் குசமும்
பரந்த விழிகள் பண்ணிரண் டிலங்க
விரைந்தெனைக் காக்க வேலோன் வருக
ஐயும் கிலியும் அடைவுடன் சௌவும்
உய்யொளி சௌவும் உயிரையுங் கிலியும்
கிலியும் சௌவும் கிளரொளி ஐயும்
நிலைபெற் றென்முன் நித்தமும் ஒளிரும்
சண்முகன் தீயும் தனியொளி ஒவ்வும்
குண்டலி யாம்சிவ குகன்தினம் வருக
ஆறு முகமும் அணிமுடி யாறும்
நீறிடும் நெற்றியும் நீண்ட புருவமும்
பன்னிரு கண்ணும் பவளச் செவ்வாயும்
நன்னெறி நெற்றியில் நவமணிச் சுட்டியும்
ஈராறு செவியில் இலகு குண்டலமும்

ஆறிரு திண்புயத் தழகிய மார்பில்
பல்பூ ஷணமும் பதக்கமும் தரித்து
நன்மணி பூண்ட நவரத்ன மாலையும்
முப்புரி நூலும் முத்தணி மார்பும்
செப்பழ குடைய திருவயி றுந்தியும்
துவண்ட மருங்கில் சுடரொளிப் பட்டும்
நவரத்னம் பதித்த நற்சீ ராவும்
இருதொடை யழகும் இணைமுழந் தாளும்
திருவடி யதனில் சிலம்பொலி முழங்க
செககண செககண செககண செகண
மொகமொக மொகமொக மொகமொக மொகென
நகநக நகநக நகநக நகென
டிகுகுண டிகுடிகு டிகுகுண டிகுண
ரரரர ரரரர ரரரர ரரர
ரிரிரிரி ரிரிரிரி ரிரிரிரி ரிரிரி
டுடுடுடு டுடுடுடு டுடுடுடு டுடுடு
டகுடகு டிகுடிகு டங்கு டிங்குகு
விந்து விந்து மயிலோன் விந்து
முந்து முந்து முருகவேள் முந்து
என்றனை யாளும் ஏரகச் செல்வ
மைந்தன் வேண்டும் வரமகிழ்ந்துதவும்
லாலா லாலா லாலா வேசமும்
லீலா லீலா லீலா விநோதனென்(று)
உன் திரு வடியை உறுதியென் றெண்ணும்
என்தலை வைத்துன் இணையடி காக்க
என்னுயிர்க் குயிராம் இறைவன் காக்க
பன்னிரு விழியால் பாலனைக் காக்க
அடியேன் வதனம் அழகுவேல் காக்க
பொடிபுனை நெற்றியைப் புனிதவேல் காக்க

கதிர்வேல் இரண்டும் கண்ணினைக் காக்க
விதிசெவி இரண்டும் வேலவர் காக்க
நாசிகள் இரண்டும் நல்வேல் காக்க
பேசிய வாய்தனைப் பெருவேல் காக்க
முப்பத் திருபல் முனைவேல் காக்க
செப்பிய நாவைச் செவ்வேல் காக்க
கன்னம் இரண்டும் கதிர்வேல் காக்க
என்னிளங் கழுத்தை இனியவேல் காக்க
மார்பை இரத்ன வடிவேல் காக்க
சேரிள முலைமார் திருவேல் காக்க
வடிவேல் இருதோள் வளம்பெறக் காக்க
பிடரிகள் இரண்டும் பெருவேல் காக்க
அழகுடன் முதுகை அருள்வேல் காக்க
பழுபதி னாறும் பருவேல் காக்க
வெற்றிவேல் வயிற்றை விளங்கவே காக்க
சிற்றிடை அழகுறச் செவ்வேல் காக்க
நாணாங் கயிற்றை நல்வேல் காக்க
ஆண் குறியிரண்டும் அயில்வேல் காக்க
பிட்டம் இரண்டும் பெருவேல் காக்க
வட்டக் குதத்தை வடிவேல் காக்க
பணைத்தொடை இரண்டும் பருவேல் காக்க
கணைக்கால் முழந்தாள் கதிர்வேல் காக்க
ஐவிரல் அடியினை அருள்வேல் காக்க
கைகள் இரண்டும் கருணைவேல் காக்க
முன்கை இரண்டும் முரண்வேல் காக்க
பின்கை இரண்டும் பின்னவள் இருக்க
நாவில் சரஸ்வதி நற்றுணை யாக
நாபிக் கமலம் நல்வேல் காக்க
முப்பால் நாடியை முனைவேல் காக்க

எப்பொழு தும்எனை எதிர்வேல் காக்க
அடியேன் வதனம் அசைவுள நேரம்
கடுகவே வந்து கனகவேல் காக்க
வரும்பகல் தன்னில் வச்சிரவேல் காக்க
அரையிருள் தன்னில் அனையவேல் காக்க
ஏமத்தில் ஜாமத்தில் எதிர்வேல் காக்க
தாமதம் நீக்கிச் சதுர்வேல் காக்க
காக்க காக்க கனகவேல் காக்க
நோக்க நோக்க நொடியில் நோக்க
தாக்கத் தாக்கத் தடையறத் தாக்க
பார்க்கப் பார்க்கப் பாவம் பொடிபட
பில்லி சூனியம் பெரும்பகை அகல
வல்ல பூதம் வலாஷ்டிகப் பேய்கள்
அல்லற் படுத்தும் அடங்கா முனியும்
பிள்ளைகள் தின்னும் புழக்கடை முனியும்
கொள்ளிவாய்ப் பேய்களும் குறளைப் பேய்களும்
பெண்களைத் தொடரும் பிரம ராட்சதரும்
அடியனைக் கண்டால் அலறிக் கலங்கிட
இரிசி காட்டேரி இத்துன்ப சேனையும்
எல்லிலும் இருட்டிலும் எதிர்படும் அண்ணரும்
கனபூசை கொள்ளும் காளியோ டனைவரும்
விட்டாங் காரரும் மிகுபல பேய்களும்
தண்டியக் காரரும் சண்டாளர்களும்
என்பெயர் சொல்லவும் இடிவிழுந்(து) ஓடிட
ஆனை அடியினில் அரும்பா வைகளும்
பூனை மயிரும் பிள்ளைகள் என்பும்
நகமும் மயிரும் நீண்முடி மண்டையும்
பாவைக ளுடனே பலகல சத்துடன்
மனையிற் புதைத்த வஞ்சனை தனையும்

ஒட்டியச் செருக்கும் ஒட்டியப் பாவையும்
காசும் பணமும் காவுடன் சோறும்
ஓது மஞ்சனமும் ஒருவழிப் போக்கும்
அடியனைக் கண்டால் அலைந்து குலைந்திட
மாற்றார் வஞ்சகர் வந்து வணங்கிட
கால தூதாள்எனைக் கண்டால் கலங்கிட
அஞ்சி நடுங்கிட அரண்டு புரண்டிட
வாய்விட் டலறி மதிகெட் டோடப்
படியினில் முட்டப் பாசக் கயிற்றால்
கட்டுட னங்கம் கதறிடக் கட்டு
கட்டி உருட்டு கைகால் முறியக்
கட்டு கட்டு கதறிடக் கட்டு
முட்டு முட்டு முழிகள் பிதுங்கிட
செக்கு செக்கு செதில்செதி லாக
சொக்கு சொக்கு சூர்ப்பகைச் சொக்கு
குத்து குத்து கூர்வடி வேலால்
பற்று பற்று பகலவன் தணலெரி
தணலெரி தணலெரி தணலது வாக
விடுவிடு வேலை வெருண்டது ஓட
புலியும் நரியும் புல்நரி நாயும்
எலியும் கரடியும் இனித்தொடர்ந் தோடத்
தேளும் பாம்பும் செய்யான் பூரான்
கடிவிட விஷங்கள் கடித்துய ரங்கம்
ஏறிய விஷங்கள் எளிதுடன் இறங்க
ஒளிப்பும் சுளுக்கும் ஒருதலை நோயும்
வாதம் சயித்தியம் வலிப்புப் பித்தம்
சூலைசயம் குன்மம் சொக்குச் சிரங்கு
குடைச்சல் சிலந்தி குடல்விப் பிருதி
பக்கப் பிளவை படர்தொடை வாழை

கடுவன் படுவன் கைத்தாள் சிலந்தி
பற்குத் தரணை பருஅரை யாப்பும்
எல்லாப் பிணியும் என்றனைக் கண்டால்
நில்லா தோட நீயெனக் கருள்வாய்
ஈரே ழுலகமும் எனக்குற வாக
ஆணும் பெண்ணும் அனைவரும் எனக்கா
மண்ணாள் அரசரும் மகிழ்ந்துற வாகவும்
உன்னைத் துதிக்க உன்திரு நாமம்
சரவண பவனே சைலொளி பவனே
திரிபுர பவனே திகழொளி பவனே
பரிபுர பவனே பவம்ஒழி பவனே
அரிதிரு மருகா அமரா பதியைக்
காத்துத் தேவர்கள் கடுஞ்சிறை விடுத்தாய்
கந்தா குகனே கதிர்வே லவனே
கார்த்திகை மைந்தா கடம்பா கடம்பனை
இடும்பனை அழித்த இனியவேல் முருகா
தணிகா சலனே சங்கரன் புதல்வா
கதிர்கா மத்துறை கதிர்வேல் முருகா
பழனிப் பதிவாழ் பால குமாரா
ஆவினன் குடிவாழ் அழகிய வேலா
செந்தின்மா மலையுறும் செங்கல்வ ராயா
சமரா புரிவாழ் சண்முகத் தரசே
காரார் குழலாள் கலைமகள் நன்றாய்
என்னா விருக்க யானுனைப் பாட
எனைத்தொடர்ந் திருக்கும் எந்தை முருகனைப்
பாடினேன் ஆடினேன் பரவச மாக
ஆடினேன் ஆடினேன் ஆவினன் பூதியை
நேச முடன்யான் நெற்றியில் அணியப்
பாச வினைகள் பற்றது நீங்கி

உன்பதம் பெறவே உன்னரு ளாக
அன்புடன் இரட்சி அன்னமும் சொன்னமும்
மெத்தமெத் தாகவேலா யுதனார்
சித்திபெற் றடியேன் சிறப்புடன் வாழ்க
வாழ்க வாழ்க மயிலோன் வாழ்க
வாழ்க வாழ்க வடிவேல் வாழ்க
வாழ்க வாழ்க மலைக்குரு வாழ்க
வாழ்க வாழ்க மலைக்குற மகளுடன்
வாழ்க வாழ்க வாரணத் துவசம்
வாழ்க வாழ்கஎன் வறுமைகள் நீங்க
எத்தனை குறைகள் எத்தனை பிழைகள்
எத்தனை அடியேன் எத்தனை செயினும்
பெற்றவன் நீகுரு பொறுப்ப(து) உன்கடன்
பெற்றவள் குறமகள் பெற்றவ ளாமே
பிள்ளையென்(று) அன்பாய்ப் பிரியம் அளித்து
மைந்தன்என் மீதுன் மனமகிழ்ந் தருளித்
தஞ்சமென்(று) அடியார் தழைத்திட அருள்செய்
கந்தர் சஷ்டி கவசம் விரும்பிய
பாலன் தேவ ராயன் பகர்ந்ததைக்
காலையில் மாலையில் கருத்துடன் நாளும்
ஆசா ரத்துடன் அங்கம் துலக்கி
நேச முடனொரு நினைவது வாகிக்
கந்தர் சஷ்டி கவசம் இதனைச்
சிந்தை கலங்காது தியானிப் பவர்கள்
ஒருநாள் முப்பத் தாறுருக் கொண்டு
ஓதியே ஜபித்து உகந்துநீ றணிய
அஷ்டதிக் குள்ளோர் அடங்கலும் வசமாய்த்
திசைமன்னர் எண்மர் செயலது அருளுவர்
மாற்றலர் எல்லாம் வந்து வணங்குவர்

நவகோள் மகிழ்ந்து நன்மை அளித்திடும்
நவமதன் எனவும் நல்லெழில் பெறுவர்
எந்த நாளும் ஈரெட்டா வாழ்வர்
கந்தர்கை வேலாம் கவசத் தடியை
வழியாய்க் காண மெய்யாய் விளங்கும்
விழியாற் காண வெருண்டிடும் பேய்கள்
பொல்லா தவரைப் பொடிப்பொடி யாக்கும்
நல்லோர் நினைவில் நடனம் புரியும்
சர்வ சத்துரு சங்கா ரத்தடி
அறிந்தென துள்ளம் அஷ்டலக்ஷ் மிகளில்
வீரலக்ஷ் மிக்கு விருந்துண வாகச்
சூரபத் மாவைத் துணித்தகை யதனால்
இருபத் தேழ்வர்க்(கு) உவந்(து) அமுதளித்த
குருபரன் பழனிக் குன்றினில் இருக்கும்
சின்னக் குழந்தை சேவடி போற்றி
எனைத்தடுத் தாட்கொள என்றன துள்ளம்
மேவிய வடிவுறும் வேலவா போற்றி
தேவர்கள் சேனா பதியே போற்றி
குறமகள் மனமகிழ் கோவே போற்றி
திறமிகு திவ்விய தேகா போற்றி
இடும்பா யுதனே இடும்பா போற்றி
கடம்பா போற்றி கந்தா போற்றி
வெற்றி புனையும் வேலே போற்றி
உயர்கிரி கனக சபைக்கோர் அரசே
மயில்நட மிடுவோய் மலரடி சரணம்
சரணம் சரணம் சரவண பவஓம்
சரணம் சரணம் சண்முகா சரணம்

**கந்தர் சஷ்டி கவசம் முற்றிற்று.**



ஓம் சரவணபவ

## ஸ்ரீ சத்குரு சாந்தானந்த சுவாமிகள் அருளிய

# ஸ்ரீ ஸ்கந்தகுரு கவசம்

கலியுகத் தெய்வமே கந்தனுக்கு மூத்தோனே
மூஷிக வாகனனே மூலப் பொருளோனே
ஸ்கந்தகுரு கவசத்தைக் கலிதோஷம் நீங்கிடவே
திருவடியின் திருவருளால் செப்புகிறேன் காத்தருள்வாய். (4)

சித்தி விநாயக ஜெயமருள் போற்றுகிறேன்
சிற்பர கணபதே நற்கதியும் தந்தருள்வாய்
கணபதி தாளிணையைக் கருத்தினில் வைத்திட்டேன்
அச்சம் தீர்த்தென்னை இரட்சித்திடுவீரே! (8)

ஸ்கந்தா சரணம் ஸ்கந்தா சரணம்
சரவணபவ குஹா சரணம் சரணம்
குருகுஹா சரணம் குருபரா சரணம்
சரண மடைந்திட்டேன் கந்தா சரணம். (12)

தனைத்தான் அறிந்து நான்தன் மயமாகிடவே
ஸ்கந்தகிரி குருநாதா தந்திடுவீர் ஞானமுமே
தத்தகிரி குருநாதா வந்திடுவீர் வந்திடுவீர்
அவதூத ஸத்குருவாய் ஆண்டவனே வந்திடுவீர். (16)

அன்புருவாய் வந்தென்னை ஆட்கொண்ட குருபரனே
அறம்பொருளம இன்பம் வீடுமே தந்தருள்வாய்
தந்திடுவாய் வரமதனை ஸ்கந்தகுரு நாதா
சண்முகா சரணம் சரணம் ஸ்கந்த குரோ. (20)

காத்திடுவாய் காத்திடுவாய் ஸ்கந்தகுரு நாதா
போற்றிடுவேன் போற்றிடுவேன் புவனகுரு நாதா
போற்றி போற்றி ஸ்கந்தா போற்றி
போற்றி போற்றி முருகா போற்றி. (24)

அறுமுகா போற்றி அருட்பதம் அருள்வாய்
தகப்பன் சாமியே என் இதயத்துள் தங்கிடுவாய்

ஸ்வாமி மலைதனில் சொன்னதனைச் சொல்லிடுவாய்
சிவகுரு நாதா செப்பிடுவாய் ப்ரணவமதை. (28)

அகக்கண் திறக்க அருள்வாய் உபதேசம்
திக்கெலாம் வென்று திருச்செந்தில் அமர்ந்தோனே
ஆறுமுக ஸ்வாமியுன்னை அருட்ஜோதியாய்க் காண
அகத்துள்ளே குமராநீ அன்புமயமாய் வருவாய். (32)

அமரத் தன்மையினை அனுக்ரஹித் திடுவாயே
வேலுடைக் குமரா நீ வித்தையும் தந்தருள்வாய்
வேல்கொண்டு வந்திடுவாய் காலனை விரட்டிடவே
தேவரைக் காத்த திருச்செந்தி லாண்டவனே. (36)

திருமுருகன் பூண்டியிலே திவ்வியஜோதி யானகந்தா
பரஞ்ஜோதி யுங்காட்டிப் பரிபூர்ண மாக்கிடுவாய்
திருமலை முருகாநீ திடஞான மருள்புரிவாய்
செல்வமுத்துக் குமரா மும்மல மகற்றிடுவாய். (40)

அடிமுடி யறியவொணா அண்ணா மலையோனே
அருணாசலக் குமரா அருணகிரிக் கருளியவா
திருப்பரங் கிரிகுஹனே தீர்த்திடுவாய் வினைமுழுதும்
திருத்தணி வேல்முருகா தீரனாய் ஆக்கிடுவாய். (44)

எட்டுக்குடிக் குமரா ஏவல்பில்லி சூனியத்தைப்
பகைவர் சூதுவாதுகளை வேல்கொண்டு விரட்டிடுவாய்
எல்லாப் பயன்களும் எனக்குக் கிடைத்திடவே
எங்கும் நிறைகந்தா எண்கண் முருகா நீ. (48)

என்னுள் அறிவாய்நீ உள்ளொளியாய் வந்தருள்வாய்
திருப்போரூர் மாமுருகா திருவடியே சரணமய்யா
அறிவொளியாய் வந்துநீ அகக்கண்ணைத் திறந்திடுவாய்
திருச்செந்தூர் ஷண்முகனே ஜகத்குருவிற் கருளியவா. (52)

ஜகத்குரோ சிவகுமரா சித்தமல மகற்றிடுவாய்
செங்கோட்டு வேலவனே சிவானு பூதிதாரும்

சிக்கல் சிங்காரா ஜீவனைச்சிவ னாக்கிடுவாய்
குன்றக் குடிக்குமரா குருகுகனாய் வந்திடப்பா. (56)

குமரகிரிப் பெருமானே மனத்தையும் மாய்த்திடுவீர்
பச்சைமலை முருகா இச்சையைக் களைந்திடப்பா
பவழமலை ஆண்டவனே பாபங்களைப் போக்கிடப்பா
விராலிமலை ஷண்முகனே விரைவில் நீவந்திடப்பா (60)

வயலூர்க் குமாரகுரோ ஞானவரமெனக் கருள்வீரே
வெண்ணெய் மலைமுருகா மெய்வீட்டைத் தந்திடுவீர்
கதிர்காம வேலவனே மனமாயை அகற்றிடுவாய்
காந்தமலைக் குமரா கருத்துள் வந்தடுவீர் (64)

மயிலத்து முருகாநீ மனத்தகத்துள் வந்திடுவீர்
கஞ்சமலை சித்தகுரோ கண்ணொளியாய் வந்திடுவீர்
குமரமலை குருநாதா கவலையெல்லாம் போக்கிடுவீர்
வள்ளிமலை வேல்முருகா வேல்கொண்டு வந்திடுவீர் (68)

வடபழனி யாண்டவனே வல்வினைகள் போக்கிடுவீர்
ஏழுமலை யாண்டவனே எத்திக்கும் காத்திடுவீர்
ஏழ்மையகற்றிக் கந்தா எமபயம் போக்கிடுவீர்
அசையாத நெஞ்சத்தில் அறிவாக நீஅருள்வாய் (72)

ஆறுபடைக் குமரா மயிலேறி வந்திடுவாய்
பணிவதே பணியென்று பணித்தனை நீஎனக்கு
பணிந்தேன் கந்தா உன்பாதம் பணிந்துவப்பேன்
அருட்பெருஞ் ஜோதியே அன்பெனக் கருள்வாயே (76)

படர்ந்த அன்பினைநீ பரப்பிரம்மம் என்றனையே
உலகெங்கு முள்ளது ஒருபொருள் அன்பேதான்
உள்ளுயி ராகி இருப்பதும் அன்பென்றாய்
அன்பே குமரன் அன்பே ஸ்கந்தன் (80)

அன்பே ஓமெனும் அருள்மந் திரமென்றாய்
அன்பை உளத்திலே அசையாது அமர்த்திடுமோர்

சத்தியைத் தந்து தடுத்தாட் கொண்டிடவும்
வருவாய் அன்பனாய் வந்தருள் ஸ்கந்தகுரோ (84)

யாவர்க்கும் இனியவன்நீ யாவர்க்கும் எளியன்நீ
யாவர்க்கும் வலியன்நீ யாவர்க்கு மானோய்நீ
உனக்கொரு கோயிலைஎன் அகத்துள்ளே புனைவேனே
சிவசக்திக் குமரா சரணம் சரணமையா (88)

அபாயம் தவிர்த்துத் தடுத்தாட் கொண்டருள்வாய்
நிழல்வெயில் நீர்நெருப்பு மண்காற்று வானதிலும்
பகைமையை அகற்றி அபயமளித் திடுவீர்
உணர்விலே ஒன்றிஎன்னை நிர்மல மாக்கிடுவாய் (92)

யானென தற்றமெய் ஞானம தருள்வாய்நீ
முக்திக்கு வித்தான முருகா கந்தா
சதுர்மறை போற்றும் ஷண்முக நாதா
ஆகம மேத்தும் அம்பிகை புதல்வா (96)

ஏழையைக் காக்கநீ வேலேந்தி வந்திடுவாய்
தாயாய்த் தந்தையாய் முருகா தக்கணம் நீவருவாய்
சக்தியும் சிவனுமாய்ச் சடுதியில் நீவருவாய்
பரம் பொருளான பாலனே ஸ்கந்தகுரோ (100)

ஆதி மூலமே அருவாய் உருவாய்நீ
அடியனைக் காத்திட அறிவாய்வந் தருள்வாய்
உள்ளொளியாய் முருகா உடனேநீ வா வா வா
தேவாதி தேவா சிவகுரோ வா வா வா (104)

வேலாயுதத்துடன் குமரா விரைவில்நீ வந்திடப்பா!
காண்பன யாவுமாய்க் கண்கண்ட தெய்வமாய்
வேதச் சுடரோய் மெய்கண்ட தெய்வமே
மித்தையா மிவ்வுலகை மித்தையென் றறிந்திடச்செய் (108)

அபயம்அபயம் கந்தா அபயமென் றலறுகிறேன்
அமைதியை வேண்டி அறுமுகவா வாவென்றேன்

உன்துணை வேண்டினேன் உமையவள் குமராகேள்
அச்சம் அகற்றிடுவாய் அமைதியைத் தந்திடுவாய் (112)

வேண்டிய துன்னருளே அருள்வதுன் கடனேயாம்
உன்அரு ளாலே உன்தாள் வணங்கிட்டேன்
அட்டமா சித்திகளை அடியனுக் கருளிடப்பா
அஜபை வழியிலே அசையாம லிருத்திவிடு (116)

சித்தர்கள் போற்றிடும் ஞானசித்தியும் தந்துவிடு
சிவானந்தத் தேனில் திளைத்திடவே செய்துவிடு
அருள்ஒளிக் காட்சியை அகத்துளே காட்டிவிடு
அறிவை அறிந்திடும் அவ்வருளையும் நீதந்துவிடு (120)

அனுக்ரஹித் திடுவாய் ஆதிகுரு நாதாகேள்
ஸ்கந்த குருநாதா ஸ்கந்த குருநாதா
தத்துவம் மறந்து தன்னையும் நான்மறந்து
நல்லது கெட்டதும் நானென்பதும் மறந்து (124)

பாவபுண் ணியத்தோடு பரலோகம் மறந்திடச்செய்
அருள்வெளி விட்டிவனை அகலா திருந்திடுவாய்
அடிமையைக் காத்திடுவாய் ஆறுமுகக் கந்தகுரோ
சித்தியிலே பெரிய ஞானசித்தி நீஅருளச் (128)

சீக்கிரமே வருவாய் சிவானந்தம் தருவாய்
சிவானந்தம் தந்தருளிச் சிவசித்த ராக்கிடுவாய்
சிவனைப் போலென்னைச் செய்திடுவ துன்கடனே
சிவசத் குருநாதா சிவசத் குருநாதா (132)

ஸ்கந்த குருநாதா கதறுகிறேன் கேட்டிடுவாய்
தாளினைப் பிடித்தேன் தந்திடு வரமெனக்கு
திருவருட் சக்தியைத் தந்தாட் கொண்டிடுவாய்
சத்ரு பகைவர்களை ஷண்முகா ஒழித்திட்டு (136)

கிழக்குத் திசையிலிருந்து க்ருபாகரா காப்பாற்றும்
தென்கிழக்குத் திசையிலிருந்து தீனபந்தோ காப்பாற்றும்

தென்திசை யிலுமென்னைத் திருவருளால் காப்பாற்றும்
தென்மேற் கிலுமென்னைத் திறல்வேலால் காப்பாற்றும் (140)

மேற்குத் திக்கிலென்னை மால்மருகா ரக்ஷிப்பாய்
வடமேற் கிலுமென்னை மயிலோனே ரக்ஷிப்பாய்
வடக்கிலென்னைக் காப்பாற்ற வந்திடுவீர் சத்குருவாய்
வடகிழக்கில் எனக்காக மயில்மீது வருவீரே (144)

பத்துத்திக்குத் தோறுமெனைப் பறந்துவந்து ரக்ஷிப்பாய்
என்சிகையையும் சிரசினையும் சிவகுரோ ரக்ஷிப்பாய்
நெற்றியும் புருவமும் நினதருள் காக்கட்டும்
புருவங் களுக்கிடையே புருஷோத்தமன் காக்கட்டும் (148)

கண்கள் இரண்டையும் கந்தவேள் காக்கட்டும்
நாசிகள் இரண்டையும் நல்லவேல் காக்கட்டும்
செவிகள் இரண்டையும் சேவற்கொடி காக்கட்டும்
கன்னங்கள் இரண்டையும் காங்கேயன் காக்கட்டும் (152)

உதட்டி னையும்தான் உமாசுதன் காக்கட்டும்
நாக்கை நன்முருகன் நயமுடன் காக்கட்டும்
பற்களைக் கந்தன் பலம்கொண்டு காக்கட்டும்
கழுத்தை ஸ்கந்தன் கைகளால் காக்கட்டும் (156)

தோள்கள் இரண்டையும் தூயவேல் காக்கட்டும்
கைகள் விரல்களைக் கார்த்திகேயன் காக்கட்டும்
மார்பையும் வயிற்றையும் வள்ளிமணாளன் காக்கட்டும்
மனத்தை முருகன்கை மாத்தடிதான் காக்கட்டும் (160)

ஹ்ருதயத்தில் ஸ்கந்தன் இனிதுநிலைத் திருக்கட்டும்
உதரத்தை யெல்லாம் உமைமைந்தன் காக்கட்டும்
நாபிகுஹ்ய லிங்கம் நவையுடைக் குதத்தோடு
இடுப்பை முழங்காலை இணையான கால்களையும் (164)

புறங்கால் விரல்களையும் பொருந்தும் உகிர் அனைத்தையுமே
உரோமத்வாரமெல்லாம் உமைபாலா ரக்ஷிப்பாய்

தோல்ரத்தம் மஜ்ஜையும் மாம்ஸமென்பு மேதஸையும்
அறுமுகவா காத்திடுவீர் அமரர்தலைவா காத்திடுவீர் (168)

என்அஹங்காரமும் அகற்றி அறிவொளியா யிருந்தும்
முருகா வெனைக்காக்க வேல்கொண்டு வந்திடுவீர்
பாபத்தைப் பொசுக்கிப் பாரெல்லாம் சிறப்புறவே
ஓம் ஸௌம் சரவணபவ ஸ்ரீம் ஹ்ரீம் க்லீம் என்றும் (172)

க்லௌம் ஸௌம் நமஹவென்று சேர்த்திட்டா நாள்தோறும்
ஓமிருந்து நவஹவரை ஒன்றாகச் சேர்ந்திடடா
ஒன்றாகக் கூட்டியுமே உள்ளத்திலே இருத்தி
ஒருமனத் தோடுநீ உருவையும் ஏத்திடடா (176)

முருகனின் மூலமிது முழுமனத்தோ டேத்திட்டால்
மும்மல மகன்றுவிடும் முக்தியுந்தன் கையிலுண்டாம்
முக்தியை வேண்டியுமே எத்திக்கும் செல்லவேண்டாம்
முருகன் இருப்பிடமே முத்தித்தல மாகுமப்பா (180)

ஹ்ருதயத்தில் முருகனை இருத்திவிடு இக்கணமே
இக்கணமே மூலமந்த்ரம் ஏத்திவிடு ஏத்திவிடு
மூலமதை ஏத்துவோர்க்குக் காலபய மில்லையடா
காலனை நீஜயிக்கக் கந்தனைப் பற்றிடடா (184)

சொன்னபடி செய்தால் சுப்ரமண்ய குருநாதன்
தண்ணொளிப் பெருஞ்சுடராய் உன்னுள்ளே தானிருப்பான்
ஜெகமாயை ஜயித்திடவே செப்பினேன் மூலமுமே
மூலத்தை நீஜபித்தே முக்தனு மாகிடடா (188)

அக்ஷர லக்ஷமிதை அன்புடன் ஜபித்துவிடில்
எண்ணிய தெலாம்கிட்டும் எமபய மகன்றோடும்
மூவுலகும் பூஜிக்கும் முருகனருள் முன்னிற்கும்
பூவுலகில் இணையற்ற பூஜ்யனு மாவாய்நீ (192)

கோடித்தரம் ஜபித்துக் கோடிகாண வேண்டுமப்பா
கோடுகாணச் சொன்னதைநீ நாடிடுவாய் மனமே

ஜன்மம் கடைத்தேற ஜபித்திடுவாய் கோடியுமே
வேதாந்த ரகசியமும் வெளியாகு முன்னுள்ளே (196)

வேத சூக்குமத்தை விரைவாகப் பற்றிடலாம்
சுப்ரஹ் மண்யகுரு ஜோதியாயுள் தோன்றிடுவான்
அருட்பெருஞ் ஜோதியான ஆறுமுக ஸ்வாமியுமே
அந்தர் முகமிருந்து ஆட்கொள்வான் சத்தியமாய் (200)

சித்தியையும் முக்தியையும் ஸ்கந்தகுரு தந்திடுவான்
நின்னையே நான்வேண்டி நித்தமும் ஏத்துகிறேன்
மெய்யறி வாகக்கந்தா வந்திடுவாய் இவனுளேநீ
வந்திடுவாய் மருவிடுவாய் பகுத்தறி வாகவேநீ (204)

பகுத்தறி வோடிவனைப் பார்த்திடச் செய்திடப்பா
பகுத்தறி வானகந்தன் பரங்குன்றில் இருக்கின்றாய்
பழனியில் நீயும் பழம்ஜோதி யானாய்நீ
பிரமனுக் கருளியவா பிரணவப் பொருளோனே (208)

பிறவா வரமருளிப் பிரம்மமய மாக்கிடுவாய்
திருச்செந் தூரில்நீ சக்திவேல் தாங்கிவிட்டாய்
பழமுதிர் சோலையில் பரஞ்ஜோதி மயமானாய்
சுவாமி மலையிலே சிவசுவாமிக் கருளியநீ (212)

குன்றுகள் தோறும் குருவாய் அமர்ந்திட்டோய்
ஸ்கந்த கிரியைநீ சொந்தமாக்கிக் கொண்டனையே
ஸ்கந்த குருநாதா ஸ்கந்தாஸ்ரம ஜோதியே
பிறப்பையும் இறப்பையும் பெயர்த்துக் காத்திடுவாய் (216)

பிறவாமை என்கின்ற பெருவரம்நீ தந்திடுவாய்
தத்துவக் குப்பையை மறந்திடச் செய்திடுவாய்
எந்த நினைப்பையும் எரித்துநீ காத்திடுவாய்
ஸ்கந்தா சரணம் ஸ்கந்தா சரணம் (220)

சரணம் அடைந்திட்டேன் சடுதியில் வாருமே
சரவண பவனே சரவண பவனே

உன்னரு ளாலேநான் உயிரோ டிருக்கின்றேன்
உயிருக்குயி ரானகந்தா உன்னிலென்னைக் கரைத்திடப்பா (224)

என்னில் உனைக்காண எனக்கு வரமருள்வாய்
சீக்கிரம் வந்துசிவ சக்தியும் தந்தருள்வாய்
இடகலை பிங்கலை ஏதும் அறிந்திலேன்நான்
இந்திரிய மடக்கி இருந்து மறிகிலேன்நான் (228)

மனதை அடக்க வழியொன்று மறிந்திலேன்நான்
ஸ்கந்தா உன் திருவடியைப் பற்றினேன் சிக்கெனவே
சிக்கெனப் பற்றினேன் செப்பிடுவீர் உபதேசம்
காமக் கசடுகள் யாவையும் களைந்திடுவாய் (232)

சித்த சுத்தியும் ஜபமும் தந்திடுவாய்
நினைப்பெலாம் நின்னையே நினைந்திடச் செய்திடுவாய்
திருமுருகா வுன்னைத் திடமுற நினைத்திடவே
திருவருள் தந்திடுவாய் திருவருள்தான் பொங்கிடவே (236)

திருவருள் ஒன்றிலே நிலைபெறச் செய்திடுவாய்
நிலைபெறச் செய்திடுவாய் நித்யா னந்தமதில்
நித்யா னந்தமே நின்னுரு ஆகையினால்
அத்வைதா னந்தத்தில் இமைப்பொழு(து) ஆழ்த்திடுவாய் (240)

ஞான பண்டிதா நான்மறை வித்தகாகேள்
ஸ்கந்த குருநாதா ஸ்கந்தகுரு நாதாகேள்
மெய்ப்பொருள் காட்டி மேன்மை அடைந்திடச்செய்
வினைகள் யாவையுமே வேல்கொண்டு விரட்டிடுவாய் (244)

தாரித்திரியங் களையுன் தடிகொண்டு விரட்டிடுவாய்
துக்கங்கள் அனைத்தையும் தொலைதூரம் போக்கிடுவாய்
பாப உடலைப் பரிசுத்த மாக்கிடுவாய்
இன்ப துன்பத்தை இருவிழியால் விரட்டிடுவாய் (248)

ஆசைப் பேய்களை அறவே நசுக்கிடுவாய்
அகந்தைப் பிசாசை அழித்து ஒழித்திடடா

மெய்யருளாம் உன்னருளில் முருகா இருத்திடுவாய்
கண்கண்ட தெய்வமே கலியுக வரதனே (252)

ஆறுமுக மானகுரோ அறிந்திட்டே னுன்மகிமை
இக்கணமே வருவாய்என் ஸ்கந்த குருவேநீ
என்னைக் காத்திடவே எனக்குநீ அருளிடவே
அரைக்கணத்தில் நீயும் ஆடிவரு வாயப்பா (256)

வந்தெனைத் தடுத்து வலியஆட்கொள் வரதகுரோ
அன்புத் தெய்வமே ஆறுமுக மானவனே
சுப்ரமண்யனே சோகம் அகற்றிடுவாய்
ஞான ஸ்கந்தரே ஞானம் அருள்வாய்நீ (260)

ஞானதண்ட பாணியே என்னை ஞானபண்டித னாக்கிடுவாய்
அகந்தை யெலாமழித்து அன்பினை ஊட்டிடுவாய்
அன்பு மயமாக்கி ஆட்கொள்ளு வையப்பா
அன்பைஎன் உள்ளத்தில் அசைவின்றி நிறுத்திவிடு (264)

அன்பையே கண்ணாக ஆக்கிக் காத்திடுவாய்
உள்ளும் புறமும் உன்னருளாம் அன்பையே
உறுதியாக நானும் பற்றிட உவந்திடுவாய்
எல்லையில் லாதஅன்பே இறைவெளி என்றாய்நீ (268)

அங்கிங் கெனாதபடி எங்கும் அன்பென்றாய்
அன்பே சிவமும் அன்பே சக்தியும்
அன்பே ஹரியும் அன்பே பிரம்மனும்
அன்பே தேவரும் அன்பே மனிதரும் (272)

அன்பே நீயும் அன்பே நானும்
அன்பே சத்தியம் அன்பே நித்தியம்
அன்பே சாந்தம் அன்பே ஆனந்தம்
அன்பே மௌனம் அன்பே மோக்ஷம் (276)

அன்பே பிரம்மமும் அன்பே அனைத்துமென்றாய்
அன்பு இலாதஇடம் அங்குமிங்கும் இல்லையென்றாய்

எங்கும் நிறைந்தஅன்பே என்குரு நாதனப்பா
அன்பில் உறையும் அருட்குரு நாதரேதான் (280)

ஸ்கந்தாஸ் ரமத்தில் ஸ்கந்தகுரு வானான்காண்
மூவரும் தேவரும் முனிவரும் போற்றிடவே
ஸ்கந்தாஸ் ரமந்தன்னில் ஸ்கந்த ஜோதியுமாய்
ஆத்ம ஜோதியுமாய் அமர்ந்திட்ட ஸ்கந்தகுரு (284)

இருளை அகற்றவே எழுந்திட்ட எங்கள்குரு
எல்லையில் லாதஉன் இறைவெளியைக் காட்டிடுவாய்
முக்தியைத் தந்திடுவாய் மூவரும் போற்றிடவே
நம்பினேன் உன்னையே நம்பினேன் ஸ்கந்தகுரோ (288)

உன்னையன்றி இவ்வுலகில் ஒன்றுமில்லை என்றுணர்ந்தேன்
நன்கறிந்து கொண்டேன் நானும் உனதருளால்
விட்டிடமாட் டேன்கந்தா வீடது அருள்வீரே
நடுநெற்றித் தானத்து நானுனைத் தியானிப்பேன் (292)

பிரம்ம மந்திரத்தைப் போதித்து வந்திடுவாய்
சுழுமுனை மார்க்கமாய் ஜோதியைக் காட்டிடுவாய்
சிவயோகி யாகஎனைச் செய்திடும் குருநாதா
ஆசை அறுத்து அரனடியைக் காட்டிடுவாய் (296)

மெய்யடிய ராக்கி மெய்வீட்டில் இருத்திவிடும்
கொங்கு நாட்டிலே கோயில்கொண்ட ஸ்கந்தகுரோ
கொல்லிமலை மேலே குமரகுரு வானவனே
கஞ்சமலைச் சித்தர்போற்றும் ஸ்கந்தகிரி குருநாதா (300)

கருவூரார் போற்றும் காங்கேயா ஸ்கந்தகுரோ
மருதமலைச் சித்தன் மகிழ்ந்துபணி பரமகுரோ.
சென்னிமலைக் குமரா சித்தர்க் கருள்வோனே
சிவவாக்கிய சித்தர் உனைச் சிவன்மலையில் போற்றுவரே (304)

பழனியில் போகருமே பாரோர்வாழப் பிரதிஷ்டித்தான்
புலிப்பாணி சித்தர்களால் புடைசூழ்ந்த குமரகுரோ

கொங்கில் மலிந்திட்ட ஸ்கந்த குருநாதா
கள்ளம் கபடமற்ற வெள்ளையுள்ளம் அருள்வீரே (308)

கற்றவர்க ளோடென்னைக் களிப்புறச் செய்திடுமே
உலகெங்கும் நிறைந்திருந்தும் கந்தகுரு உள்ளஇடம்
ஸ்கந்தகிரி என்பதைநான் கண்டுகொண்டேன் கண்டுகொண்டேன்
நால்வர் அருணகிரி நவமிரண்டு சித்தர்களும் (309)

பக்தர்களும் போற்றும் பழனிமலை முருகாகேள்
கொங்கு தேசத்திலே குன்றுதோறும் குடிகொண்டோய்.
சீலம் நிறைந்த சேலம்மா நகரத்தில்
கன்னிமார் ஓடையின்மேல் ஸ்கந்தகிரி அதனில் (310)

ஸ்கந்தா சிரமத்தினிலே ஞானஸ்கந்த சத்குருவாய்
அமர்ந்திருக்கும் ஜோதியே ஆதிமூல மானகுரோ
அயர்ச்சியை நீக்கிடுவாய் என்தளர்ச்சியை அகற்றிடுவாய்
சுகவனேசன் மகனே சுப்ரமண்ய ஜோதியே (314)

பேரின்ப மகிழ்ச்சியையும் பெருகிடச் செய்திடப்பா
பரமா னந்தமதில் எனைமறக்கப் பாலிப்பாய்
மால்மருகா வள்ளி மணவாளா ஸ்கந்தகுரோ
சிவகுமரா உன்கோயில் ஸ்கந்தகிரி என்றுணர்ந்தேன் (316)

ஜோதிப் பிழம்பான சுந்தரனே பழனியப்பா
சிவஞானப் பழமான ஸ்கந்தகுரு நாதா
பழம்நீ என்றதினால் பழனிமலை யிருந்தாயோ
திருவாவி னன்குடியில் திருமுருகன் ஆனாயோ? (328)

குமரா முருகா குருகுகா வேலவனே
அகத்தியர்க்கு தந்து ஆட்கொண்டாய் தமிழகத்தை
கலியுக வரதனென்று கலசமுனி உனைப்புகழ்ந்தான்
ஔவைக்கு அருள்செய்த அறுமுகவா ஸ்கந்தகுரோ (332)

ஒழுக்கமொடு கருணையையும் தவத்தையும் தந்தருள்வாய்
போகருக் கருள்செய்த புவன சுந்தரனே

தண்டபாணித் தெய்வமே தடுத்தாட் கொண்டிடப்பா
ஆண்டிக் கோலத்தில் அணைத்திடுவாய் தண்டுடனே (336)

தெய்வங்கள் போற்றிடும் தண்டாயுத ஜோதியே
ஸ்கந்தகிரி மேலே ஸ்கந்தகிரிஜோதி யானவனே
கடைக்கண்ணால் பார்த்திடப்பா கருணையுள்ள ஸ்கந்தகுரோ
ஏழையைக் காத்திடப்பா ஏத்துகிறேன் உன்நாமம் (340)

உன்னையன்றி வேறொன்றை ஒருபோதும் நம்புகிலேன்
கண்கண்ட தெய்வமே கலியுக வரதனே
கந்தனென்ற பேர்சொன்னால் கடிதாக நோய்தீரும்
புவனேஸ்வரி மைந்தா போற்றினேன் திருவடியை (344)

திருவடியை நம்பினேன் திருவடி சாட்சியாக
புவனமாதா மைந்தனே புண்ணிய மூர்த்தியேகேள்
நின்நாமம் ஏத்துவதே நான்செய்யும் தவமாகும்
நாத்தழும் பேறவே ஏத்திடுவேன் நின்நாமம் (348)

முருகா முருகாவென்றே மூச்செல்லாம் விட்டிடுவேன்
உள்ளும் புறமும்ஒரு முருகனையே காண்பேன்
அங்கிங் கெனதாபடி எங்குமே முருகனப்பா
முருகன் இலாவிட்டால் மூவுலக மேதப்பா (352)

அப்பப்பா முருகனின் அருளே உலகமப்பா
அருளெலாம் முருகன் அன்பெலாம் முருகன்
ஸ்தாவர ஜங்கமமாய் ஸ்கந்தனாய் அருவுருவாய்
முருகனாய் முதல்வனாய் ஆனவன் ஸ்கந்தகுரு (356)

ஸ்கந்தாஸ் ரமமிருக்கும் ஸ்கந்தகுரு அடிபற்றிச்
சரணம் அடைந்தவர்கள் ஸாயுஜ்யம் பெற்றிடுவர்
சத்தியம் சொல்கின்றேன் சந்தேக மில்லையப்பா
வேதங்கள் போற்றிடும் வடிவேலன் முருகனைநீ (360)

சந்தேக மில்லாமல் சத்தியமாய் நம்பிடுவாய்
சத்திய மானதெய்வம் ஸ்கந்த குருநாதன்

சத்தியம் காணவேநீ சத்தியமாய் நம்பிடப்பா
சத்தியம் வேறல்ல ஸ்கந்தகுரு வேறல்ல (364)

ஸ்கந்தகுரு வேஸத்தியம் சத்தியமே ஸ்கந்தகுரு
சத்தியமாய்ச் சொன்னதை சத்தியமாய் நம்பியே நீ
சத்தியமாய் ஞானமாய் சதானந்த மாகிவிடு
அழிவற்ற ப்ரம்மமாய் ஆக்கிவிடு வான்முருகன் (368)

திருமறைகள் திருமுறைகள் செப்புவதும் இதுவேதான்
ஸ்கந்தகுரு கவசமதைச் சொந்தமாக்கிக் கொண்டுநீ
பொருளுணர்ந்து ஏத்திடப்பா பொல்லாப்பு வினையகலும்
பிறவிப் பிணியகலும் பிரம்மா னந்தமுண்டு (372)

இம்மையிலும் மறுமையிலும் இமையருனைப் போற்றிடுவர்
மூவருமே முன்னிற்பர் யாவருமே பூஜிப்பர்
அனுதினமும் கவசத்தை அன்புடன் ஏத்திடப்பா
சிரத்தா பக்தியுடன் சிந்தையொன்றிச் செப்பிடப்பா (376)

கவலை அகன்றிடுமே கந்தனருள் பொங்கிடுமே
பிறப்பும் இறப்பும் பிணிகளும் தொலைந்திடுமே
கந்தன் கவசமே கவசமென்று உணர்ந்திடுவாய்
கவசம் ஏத்துவீரேல் கலியை ஜெயித்திடலாம் (380)

கலியென்ற அரக்கனைக் கவசம் விரட்டிடுமே
சொன்ன படிசெய்து சுகமடைவாய் மனமேநீ
ஸ்கந்தகுரு கவசத்தைக் கருத்தூன்றி ஏத்துவோர்க்கு
அஷ்டைஸ் வர்யம்தரும் அந்தமில்லா இன்பம்தரும் (384)

ஆல்போல் தழைத்திடுவர் அறுகுபோல் வேரோடிடுவர்
வாழையடி வாழையைப்போல் வம்சமதைப் பெற்றிடுவர்
பதினாறும் பெற்றுப் பல்லாண்டு வாழ்ந்திடுவர்
சாந்தியும் சௌக்யமும் ஸர்வமங்களமும் பெருகிடுமே (388)

ஸ்கந்தகுரு கவசமிதைக் கருத்திருத்தி ஏற்றுவீரேல்
கர்வம் காமக்ரோதம் கலிதோஷ மகற்றுவிக்கும்

முன்செய்த வினையகன்று முருகனருள் கிட்டிவிடும்
அறம்பொருள் இன்பம்வீடு அதிசுலப மாய்க்கிட்டும் (392)

ஆசாரம் சீலமுடன் ஆத்ம நிஷ்டையுடன்
கள்ளமிலா வுளத்தோடு கந்தகுரு கவசந்தன்னை
சிரத்தை பக்தியுடன் சிவகுமரனை நினைத்துப்
பாராயணம் செய்வீரேல் பார்க்கலாம் கந்தனையும் (396)

கந்தகுரு கவசமிதை ஒரு மண்டலம் நிஷ்டையுடன்
பகலிரவு பாராமல் ஒருமனதாய்ப் பகருவீரேல்
திருமுருகன் வேல்கொண்டு திக்குகள் தோறும்நின்று
காத்திடுவான் கந்தகுரு கவலையில்லை நிச்சயமாய் (400)

ஞான ஸ்கந்தனின் திருவடியை நம்பியேநீ
கந்தகுரு கவசந்தனை ஓதுவதே தவமெனவே
உணர்ந்துகொண்டு ஓதுவையேல் உனக்குப் பெரிதான
இகபர சுகமுண்டாகும் எந்நாளும் துன்பமில்லை (404)

துன்பம் அகன்றுவிடும் தொந்தரவுகள் நீங்கிவிடும்
இன்பம் பெருகிவிடும் இஷ்டசித்தி கைகூடும்
பிறவிப் பிணியகற்றி ப்ரம்மநிஷ்டை யும்தந்து
காத்து ரக்ஷிக்கும் கந்தகுரு கவசமுமே (408)

கவலையை விட்டுநீ கந்தகுரு கவசமிதை
இருந்த படியிருந்து ஏற்றிவிடு ஏற்றினால்
தெய்வங்கள் தேவர்கள் சித்தர்கள் பக்தர்கள்
போற்றிடுவர் ஏவலுமே புரிந்திடுவர் நிச்சயமாய் (412)

ஸ்கந்தகுரு கவசம் சம்சயப் பேயோட்டும்
அஞ்ஞானமும் அகற்றி அருள்ஒளியும் காட்டும்
ஞான ஸ்கந்தகுரு நானென்று முன்நிற்பன்
உள்ளொளி யாயிருந்து உன்னிலவ னாகிடுவன் (416)

தன்னில் உனைக் காட்டி உன்னில் தனைக்காட்டி
எங்கும் தனைக்காட்டி எங்குமுனைக் காட்டிடுவான்

ஸ்கந்த ஜோதி யானகந்தன் கந்தகிரி யிருந்து
தண்டாயுதம் தாங்கித் தருகின்றான் காட்சியுமே (420)

கந்தன் புகழ்பாடக் கந்தகிரி வாருமினே
கந்தகிரி வந்துநிதம் கண்டுய்மின் ஜகத்தீரே
கலிதோஷ மகற்றுவிக்கும் கந்தகுரு கவசமிதைப்
பாராயணம் செய்து பாரில் புகழ்பெறுமின் (424)

ஸ்கந்தகுரு கவசபலன் பற்றறுத்துப் பரம்கொடுக்கும்
ஒருதரம் கவசமோதின் உள்ளழுக்குப் போகும்
இருதரம் ஏற்றுவீரேல் எண்ணியதெலாம் கிட்டும்
மூன்றுதர மோதின் முன்னிற்பன் ஸ்கந்தகுரு (428)

நான்முறையோதித்தினம் நல்லவரம் பெறுவீர்
ஐந்துமுறை தினமோதி பஞ்சாக்ஷரம் பெற்று
ஆறுமுறையோதி ஆறுதலைப் பெற்றிடுவீர்
ஏழுமுறை தினமோதின் எல்லாம் வசமாகும் (432)

எட்டுமுறை ஏத்தில் அட்டமா ஸித்திகிட்டும்
ஒன்பது தரமோதின் மரண பயமொழியும்
பத்துத்தரமோதி நித்தம் பற்றறுத்து வாழ்வீரே
கன்னிமார் ஓடையிலே நீராடி நீறுபூசிக் (436)

கந்தகுரு கவசமோதிக் கந்தகிரி ஏறிவிட்டால்
முந்தை வினையெல்லாம் கந்தன் அகற்றிடுவன்
நிந்தைகள் நீங்கிவடும் நிஷ்டையுமே கைகூடும்
கன்னிமார் ஓடைநீரைக் கைகளிலே நீஎடுத்துக் (440)

கந்தனென்ற மந்திரத்தைக் கண்மூடி யுருவேத்தி
உச்சியிலும் தெளித்து உட்கொண்டு விட்டிட்டால்
சித்த மலம் அகன்று சித்தசுத்தியும் கொடுக்கும்
கன்னிமார் தேவிகளைக் கன்னிமார் ஓடையிலே (444)

கண்டு வழிபட்டுக் கந்தகிரி யேறிடுவீர்
கந்தகிரி யேறிஞான ஸ்கந்தகுரு கவசமிதைப்
பாராயணம் செய்துலகில் பாக்யமெல்லாம் பெற்றிடுவீர். (447)

**ஸ்ரீ ஸ்கந்தகுரு கவசம் முற்றிற்று.**



ஓம் சரவணபவ

ஸ்ரீ அருணகிரிநாதர் அருளிய

# கந்தர் அலங்காரம்

## காப்பு

அடலருணைத்திருக் கோபுரத்தே, அந்த வாயிலுக்கு
வடவருகில் சென்று கண்டு கொண்டேன் வருவார்தலையில்
தடபடெனப்படு குட்டுடன் சர்க்கரை மொக்கியகைக்
கடதட கம்பக் களிற்றுக் கிளைய களிற்றினையே.

## நூல்

பேற்றைத் தவம் சற்றும் இல்லாத என்னை, ப்ரபஞ்சம் என்னும்
சேற்றைக் கழிய வழிவிட்ட வா! செஞ்சடாடவிமேல்
ஆற்றைப் பணியை இதழியைத் தும்பையை, அம்புலியின்
கீற்றைப் புனைந்த பெருமான் குமாரன் க்ருபாகரனே. (1)

அழித்துப் பிறக்க ஒட்டா அயில்வேலன் கவியை அன்பால்
எழுத்துப் பிழையறக் கற்கின்றிலீர்! எரி மூண்ட(து) என்ன
விழித்துப் புகை எழப் பொங்குவெம் கூற்றன் விடும் கயிற்றால்
கழுத்தில் சுருக்(கு) இட்(டு) இழுக்கும் அன்றோ? கவி கற்கின்றதே! (2)

தேர்அணி இட்டுப் புரம் எரித் தான்மகன் செங்கையில்வேல்
கூர் அணி இட்(டு) அணு ஆகிக் க்ரவுஞ்சம் குலைந்(து) அரக்கர்
நேர் அணி யிட்டு வளைந்த கடகம் நெளிந்தது சூர்ப்
பேர் அணி கெட்டது தேவேந்த்ர லோகம் பிழைத்ததுவே. (3)

ஓரஒட்டார் ஒன்றை உன்ன ஒட்டார் மலர் இட்(டு) உனதாள்
சேர ஒட்டார் ஐவர் செய்வ(து)என்? யான் சென்று தேவர் உய்யச்
சோர நிட்டூரனை சூரனைக் கார் உடல் சோரிகக்கக்
கூரகட்டாரி இட்(டு) ஓர் இமைப் போதினில் கொன்றவனே! (4)

திருந்தப் புவனங்கள் ஈன்றபொற் பாவைதிருமுலைப் பால்
அருந்திச் சரவணப் பூந்தொட்டில் ஏறி, அறுவர் கொங்கை
விரும்பிக் கடல்அழக் குன்(று) அழச் சூர் அழ விம்மி அழும்
குருந்தைக் குறிஞ்சிக் கிழவன் என்(று) ஓதும் குவலயமே. (5)

பெரும்பைம் புனத்தினுள் சிற்றேனல் காக்கின்ற பேதைகொங்கை
விரும்பும் குமரனை மெய் அன்பினால் மெல்ல மெல்ல உள்ள
அரும்பும் தனிப் பரமானந்தம் தித்தித்(து) அறிந்த அன்றே
கரும்பும் துவர்த்துச் செந்தேனும் புளித்(து) அறக்கைத்ததுவே. (6)

சளத்தில் பிணிபட்(டு) அசட்டு க்ரியைக்குள் தவிக்கும் என்றன்
உளத்தில் ப்ரமத்தைத் தவிர்ப்பாய்! அவுணர் உரத்(து) உதிரக்
குளத்தில் குதித்துக் குளித்துக் களித்துக் குடித்து வெற்றிக்
களத்தில் செருக்கிக் கழுதாட வேல் தொட்ட காவலனே! (7)

ஒளியில் விளைந்த உயர்ஞான பூதரத்(து) உச்சியின் மேல்
அளியில் விளைந்த(து)ஓர் ஆனந்தத் தேனை அநாதியிலே
வெளியில் விளைந்த வெறும்பாழைப் பெற்ற வெறும் தனியைத்
தெளிய விளம்பிய வா! முகம் ஆ(று) உடைத் தேசிகனே. (8)

தேன் என்று பாகு என்(று) உவமிக்கொ ணாமொழித்தெய்வவள்ளி
கோன் அன்(று)எனக்(கு) உபதேசித்த(து) ஒன்(று) உண்டு கூறவற்றோ?
வான் அன்று கால் அன்று தீ அன்று நீர் அன்று மண்ணும் அன்று
தான் அன்று நான் அன்(று) அசரீரி அன்று சரீரி அன்றே. (9)

சொல்லுகைக்(கு)இல்லை என்(று)எல்லாம் இழந்துசும்மா இருக்கும்
எல்லையுள் செல்ல எனைவிட்ட வா! இகல் வேலன் அல்ல
கொல்லியைச் சேர்க்கின்ற சொல்லியைக் கல்வரைக்
கொவ்வைச் செவ்வாய்
வல்லியைப் புல்கின்ற மால்வரைத் தோள் அண்ணல் வல்லபமே. (10)

குசை நெகிழாவெற்றி வேலோன் அவுணர் குடர்குழம்பக்
கசையிடு வாசி விசை கொண்ட வாஹனப் பீலியின் கொத்(து)
அசைபடு கால்பட்(டு) அசைந்தது மேரு அடி இட எண்
திசைவரை தூள்பட்ட அத்தூளின் வாரி திடர்பட்டதே. (11)

படைபட்ட வேலவன் பால்வந்த வாகைப் பதாகை என்னும்
தடைபட்ட சேவல் சிற(கு) அடிக் கொள்ள ஜலதி கிழிந்(து)
உடைபட்ட(து) அண்ட கடாஹம் உதிர்ந்த(து) உடுபடலம்
இடைபட்ட குன்றமும் மாமேரு வெற்பும் இடிபட்டவே. (12)

ஒருவரைப் பங்கில் உடையாள் குமாரன் உடைமணிசேர்
திருவரைக் கிண்கிணி ஓசை படத்திடுக் கிட்(டு) அரக்கர்
வெருவரத் திக்குச் செவிபட்(டு) எட்டு வெற்பும் கனகப்
பருவரைக் குன்றும் அதிர்ந்தன தேவர் பயம் கெட்டதே. (13)

குப்பாச வாழ்க்கையுள் கூத்(து) ஆடும் ஐவரில் கொட்(பு) அடைந்த
இப்பாச நெஞ்சினை ஈடேற்று வாய்! இரு நான்கு வெற்பும்
அப்பாதி யாய்விழ மேவுரும் குலுங்கவிண் ணாரும் உய்யச்
சப்பாணி கொட்டிய கையா(று) இரண்(டு)உடை ஷண்முகனே. (14)

தாவடி ஓட்டும் மயிலிலும் தேவர் தலையிலும் என்
பாவடி ஏட்டிலும் பட்ட(து) அன்றோ? படி மாவலிபால்
மூவடி கேட்டு அன்று மூதண்ட கூட முகடு முட்டச்
சேவடி நீட்டும் பெருமான் மருகன்தன் சிற்றடியே. (15)

தடுங்கோள் மனத்தை விடுங்கோள் வெகுளியைத் தானம் என்றும்
இடுங்கோள்! இருந்தபடி இருக்கோள்! எழு பாரும் உய்யக்
கொடுங்கோபச் சூருடன் குன்றம் திறக்கத் துளைக்கவை வேல்
விடுங்கோன் அருள் வந்து தானே உமக்கு வெளிப்படுமே. (16)

வேதாகமசித்ர வேல் ஆயுதன்வெட்சி பூத்த தண்டைப்
பாதார விந்தம் அரண் ஆக அல்லும் பகலும் இல்லாச்
சூதான(து) அற்ற வெளிக்கே ஒளித்துச் சும்மா இருக்கப்
போதாய்! இனி மனமே! தெரியா(து) ஒரு பூதர்க்குமே. (17)

வையில் கதிர்வடி வேலோனை வாழ்த்தி வறிஞர்க்(கு) என்றும்
நொய்யில் பிள(வு) அளவேனும் பகிர்மின்கள்! நுங்கட்(கு)இங்ஙன்
வெய்யிற்(கு) ஒதுங்க உதவா உடம்பின் வெறும் நிழல் போல்
கையிற் பொருளும் உதவாதுகாணுங் கடைவழிக்கே. (18)

சொன்ன கிரௌஞ்ச கிரிஊடுருவத் தொளைத்தவைவேல்
மன்ன! கடம்பின் மலர்மாலை மார்ப! மௌனத்தை உற்று
நின்னை உணர்ந்(து) உணர்ந்(து) எல்லாம் ஒருங்கிய
நிர்க்குணம் பூண்(டு)
என்னை மறந்(து) இருந்தேன் இறந்தே விட்ட(து) இவ்வுடம்பே. (19)

கோழிக் கொடியன் அடிபணியாமல் குவலயத்தே
வாழக் கருதும் மதிஇலி காள்! உங்கள் வல்வினை நோய்
ஊழில் பெருவலி உன்னஒட்டா(து) உங்கள் அத்தம் எல்லாம்
ஆழப் புதைத்து வைத்தால் வருமோ? நும் அடிப்பிறகே. (20)

மரண ப்ரமாதம் நமக்(கு) இல்லை; ஆம் என்றும் வாய்த்ததுணை
கிரணக் கலாபியும் வேலும் உண்டேகிண் கிணிமுகுள
சரண ப்ரதாப சசிதேவி மங்கல்ய தந்துரஷா
பரண க்ருபாகர ஞானாகரசுர பாஸ்கரனே. (21)

மொய்தார் அணிகுழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்
வைதாரையும் அங்கு வாழவைப்போன் வெய்ய வாரணம்போல்
கைதான் இருப(து) உடையான் தலைபத்தும் கத்தரிக்க
எய்தான் மருகன் உமையாள் பயந்த இலஞ்சியமே. (22)

தெய்வத் திருமலைச் செங்கோட்டில் வாழும் செழும் சுடரே!
வைவைத்த வேற்படை வானவனே! மறவேன் உனை நான்
ஐவர்க்(கு) இடம்பெறக் கால் இரண்(டு) ஒட்டி அதில் இரண்டு
கைவைத்த வீடு குலையும் முன்னே வந்து காத்(து) அருளே. (23)

கின்னம் குறித்து அடியேன்செவி நீ அன்று கேட்கச் சொன்ன
குன்னங்குறிச்சி வெளியாக்கி விட்டது கோடுகுழல்
சின்னம் குறிக்கக் குறிஞ்சிக் கிழவர் சிறுமிதனை
முன்னம் குறிச்சியில் சென்றுகல் யாணம் முயன்றவனே! (24)

தண்டாயுதமும் திரிசூலமும்விழத் தாக்கி உன்னைத்
திண்டாட வெட்டி விழவிடுவேன் செந்தில் வேலனுக்குத்
தொண்டாகிய என் அவிரோத ஞானச் சுடர்வடிவாள்
கண்டாயடா அந்தகா! வந்து பார்! சற்(று)என் கைக்(கு) எட்டவே. (25)

நீலச் சிகண்டியில் ஏறும் பிரான் எந்த நேரத்திலும்
கோலக் குறத்தி உடன் வருவான் குருநாதன் சொன்ன
சீலத்தை மெள்ளத் தெளிந்(து) அறிவார் சிவ யோகிகளே
காலத்தை வென்(று) இருப்பார்மரிப் பார் வெறும் கர்மிகளே. (26)

ஓலையும் தூதரும் கண்டு திண்டாடல் ஒழித்(து) எனக்குக்
காலையும் மாலையும் முன்நிற்குமே கந்த வேள்மருங்கில்
சேலையும் கட்டிய சீராவும் கையில் சிவந்த செச்சை
மாலையும் சேவல் பதாகையும் தோகையும் வாகையுமே. (27)

வேலே விளங்குகை யான் செய்ய தாளினில் வீழந்(து) இறைஞ்சி
மாலேகொள இங்ஙன்காண்ப(து) அல்லால்மனவாக்குச்செய
லாலே அடைதற்(கு) அரியதாய் அருஉரு ஆகி ஒன்று
போலே இருக்கும் பொருளை எவ்வாறு புகல்வதுவே? (28)

கடத்தில் குறத்தி பிரான் அருளால்கலங் காதசித்தத்
திடத்தில் புணைஎன யான் கடந் தேன் சித்ர மாதர் அல்குல்
படத்தில் கழுத்தில் பழுத்தசெவ்வாயில் பணையில் உந்தித்
தடத்தில் தனத்தில் கிடக்கும்வெங் காம ஸமுத்திரமே. (29)

பால் என்பது மொழி பஞ்(சு)என்பது பதம் பாவையர்கண்
சேல் என்ப(து) ஆகத் திரிகின்ற நீசெந்திலோன் திருக்கை
வேல் என்கிலை! கொற்ற மயூரம் என்கிலை! வெட்சித் தண்டைக்
கால்என்கிலை மனமே! எங்ஙனே முக்தி காண்பதுவே? (30)

பொக்கக் குடிலில் புகுதா வகை புண்டரீகத்தினும்
செக்கச் சிவந்த கழல்வீடு தந்தருள்! சிந்து வெந்து
கொக்கத் தறிபட்(டு) எறிபட்(டு) உதிரம் குமுகுமெனக்
கக்கக் கிரிஉருவக் கதிர் வேல்தொட்ட காவலனே! (31)

கிளைத்துப் புறப்பட்ட சூர்மார்புடன்கிரி ஊ(டு) உருவத்
தொளைத்துப் புறப்பட்ட வேல் கந்தனே! துறந்தோர் உளத்தை
வளைத்துப் பிடித்துப் பதைக்கப் பதைக்க வதைக்கும் கண்ணார்க்(கு)
இளைத்துத் தவிக்கின்ற என்னை எந்நாள் வந்திரட்சிப்பையே? (32)

முடியாப் பிறவிக் கடலில் புகார் முழுவதும் கெடுக்கும்
மிடியால் படியில் விதனப் படார் வெற்றி வேல் பெருமாள்
அடியார்கு நல்ல பெருமாள் அவுணர் குலம் அடங்கப்
பொடிஆக் கியபெருமாள் திருநாமம் புகல்பவரே. (33)

பொட்டாக வெற்றைப் பொருதகந்தா! தப்பிப் போன(து) ஒன்றற்(கு)
எட்டாத ஞானக்கலை தருவாய்! இரும் காமவிடாய்ப்
பட்டார் உயிரைத் திருகிப் பருகிப் பசிதணிக்கும்
கட்டாரி வேல்விழி யார்வலைக் கேமனம் கட்டுண்டதே. (34)

பத்தித் துறைஇழிந்(து) ஆனந்த வாரி படிவதினால்
புத்தித் தரங்கம் தெளிவ(து) என்றோ? பொங்கு வெங்குருதி
மெத்திக் குதிகொள்ள வெம் சூரனைவிட்ட சுட்டியிலே
குத்தித் தரம் கொண்(டு) அமராவதி கொண்ட கொற்றவனே! (35)

சுழித்(து) ஓடும் ஆற்றின் பெருக்(கு)ஆனது செல்வம் துன்பம் இன்பம்
கழித்(து) ஓடுகின்ற(து)எக்காலம்? நெஞ்சே கரிக்கோட்டு முத்தைக்
கொழித்(து) ஓடுகாவிரிச் செங்கோடன் என்கிலை! குன்றம் எட்டும்
கிழித்(து) ஒடுவேல் என்கிலை எங்ஙனே முக்தி கிட்டுவதே. (36)

கண்(டு)உண்ட சொல்லியர் மெல்லியர் காமக் கலவிக்கள்ளை
மொண்(டு) உண்டு அயர்கினும் வேல்மற வேன்முது கூளித்திரள்
டுண்டுண் டுடுடுடு டூடூ டுடுடுடு டுண்டு டுண்டு
டிண்டிண்(டு) எனக்கொட்டி ஆடவெம் சூர்க்கொன்ற ராவுத்தனே. (37)

நாள் என்செயும்? வினைதான் என் செயும்? எனை நாடி வந்த
கோள் என்செயும்? கொடும் கூற்(று) என்செயும்? குமரேசர் இரு
தாளும் சிலம்பும் சதங்கையும் தண்டையும் ஷண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன்னே வந்து தோன்றிடினே. (38)

உதித்(து)ஆங்(கு) உழல்வதும் சாவதும் தீர்த்(து)என்னை
உன்னில் ஒன்றா
விதித்(து) ஆண்டு அருள்தரும் காலம் உண்டோ? வெற்புநட்(டு) உரக
பதித்தாம்பு வாங்கிநின்(று) அம்பரம் பம்பரம் பட்டு உழல
மதித்தான் திருமருகா! மயில் ஏறிய மாணிக்கமே. (39)

சேல் பட்(டு) அழிந்தது செந்தூர் வயல்பொழில் தேங்கடம்பின்
மால்பட்(டு) அழிந்தது பூங்கொடியார் மனம் மாமயிலோன்
வேல்பட்(டு) அழிந்தது வேலையும் சூரனும் வெற்பும் அவன்
கால்பட்டு(டு) அழிந்த(து) இங்(கு) என்தலைமேல் அயன்
கையெழுத்தே. (40)

பாலே அனைய மொழியார்தம் இன்பத்தைப் பற்றி என்றும்
மாலே கொண்(டு) உய்யும் வகை அறியேன் மலர்த்தாள் தருவாய்!
காலே மிக உண்டு காலே இலாத கணபணத்தின்
மேலே துயில் கொள்ளும் மாலோன் மருக! செவ்வேலவனே! (41)

நிணம்காட்டும் கொட்டிலை விட்(டு) ஒரு வீ(டு) எய்தி நிற்க நிற்கும்
குணம் காட்டி ஆண்ட குருதேசிகன்நம் குறச்சிறுமான்
பணம் காட்டும் அல்குற்(கு) உருகும் குமரன் பதாம்புயத்தை
வணங்காத்தலை வந்(து)இ(து) எங்கே எனக்(கு) இங்ஙன்
வாய்த்ததுவே? (42)

கவியால் கடல் அடைத்தோன் மருகோனைக் கணபணக்கட்
செவியால் பணி அணி கோமான் மகனைத் திறல் அரக்கர்
புவி ஆர்ப்(பு) எழத்தொட்ட போர்வேல் முருகனைப்
போற்றி அன்பால்
குவியாக் கரங்கள் வந்(து) எங்கே எனக்(கு) இங்ஙன் கூடியவே? (43)

தோலால் சுவர்வைத்(து) நால் ஆறு காலில் சுமத்தி இரு
காலால் எழுப்பி வளைமுது(கு) ஒட்டிக்கைந் நாற்றிநரம்
பாலார்க்கை இட்டுத் தசைகொண்டு மேய்ந்த அகம் பிரிந்தால்
வேலால் கிரிதொளைத் தோன் இருதாள் அன்றிவே(று) இல்லையே. (44)

ஒரு பூதரும் அறியாத்தனி வீட்டில் உரை உணர்(வு) (அற்று)
இரு பூத வீட்டிராமல் என்றான் இரு கோட்(டு) ஒரு கைப்
பொரு பூதரம் உரித்(து) ஏகாசம் இட்ட புராந்தகற்குக்
குருபூத வேலவன் நிஷ்ட்டூரசூர குலாந்தகனே. (45)

நீயான ஞான விநோதம் தனை என்று நீ அருள்வாய்?
சேயான வேல்கந்த னே!செந்திலாய் சித்ர மாதர் அல்குல்
தோயா உருகிப் பருகிப் பெருகித் துவளும் இந்த
மாயா விநோத மனோதுக்கம் ஆனது மாய்வதற்கே. (46)

பத்தித் திருமுகம் ஆறுடன் பன்னிரு தோள்களுமாய்த்
தித்தித்(து) இருக்கும் அமுதுகண்டேன் செயல்மாண்(டு) அடங்கப்
புத்திக் கமலத்(து) உருகிப் பெருகிப் புவனம் ஏற்றித்
தத்திக் கரை புரளும் பரமானந்த ஸாகரத்தே. (47)

புத்தியை வாங்கிநின் பாதாம் புயத்தில் புகட்டி அன்பாய்
முத்தியை வாங்க அறிகிலேன்முது சூர் நடுங்கச்
சத்தியை வாங்கத் தரமோ? குவடு தவிடுபடக்
குத்திய காங்கேயனே! வினையேற்(கு) என் குறித்தனையே? (48)

சூரில் கிரியில் கதிர்வேல் எறிந்தவன் தொண்டர்குழாம்
சாரில் கதி அன்றி வே(று) இலை காண் தண்டு தாவடிபோய்த்
தேரில் கரியில் பரியில் திரிபவர் செல்வம் எல்லாம்
நீரில் பொறி என்(று) அறியாத பாவி நெடுநெஞ்சமே! (49)

படிக்கும் திருப்பகழ் போற்றுவன் கூற்றுவன் பாசத்தினால்
பிடிக்கும் பொழுதுவந்(து) அஞ்சல் என்பாய்! பெரும் பாம்பில் நின்று
நடிக்கும் பிரான்மருகா! கொடும் சூரன் நடுங்கவெற்பை
இடிக்கும் கலாபத் தனிமயில் ஏறும் இராவுத்தனே! (50)

மலை ஆறு கூ(று) எழ வேல் வாங்கினானை வணங்கி அன்பின்
நிலையான மாதவம் செய்குமினோ! நும்மைத் தேடிவரும்
தொலையா வழிக்குப் பொதிசோறும் உற்ற துணையும் கண்டீர்
இலை ஆயினும் வெந்த(து) ஏ(து) ஆயினும் பகிர்ந்(து) ஏற்றவர்க்கே. (51)

சிகராத்ரி கூ(று) இட்ட வேலும் செஞ்சேவலும் செந்தமிழால்
பகர் ஆர்வம் ஈ பணி பாசஸங்க் ராம பணாமகுட
நிகராக்ஷமபக்ஷ பக்ஷி துரங்க ந்ருப! குமரா!
குஹ! ராக்ஷஸபக்ஷ விக்ஷேப தீர! குணதுங்கனே! (52)

வேடிச்சி கொங்கை விரும்பும் குமரனை மெய் அன்பினால்
பாடிக் கசிந்து உள்ளபோதே கொடாதவர் பாதகத்தால்
தேடிப் புதைத்துத் திருட்டில் கொடுத்துத் திகைத்(து) இளைத்து
வாடிக் கிலேசித்து வாழ்நாளை வீணுக்கு மாய்ப்பவரே. (53)

சாகைக்கு(ம்) மீண்டு பிறக்கைக்கும் அன்றித் தளர்ந்தவர்க்(கு)ஒன்று
ஈகைக்கு எனைவிதித்தாய் இலையே! இலங்காபுரிக்குப்
போகைக்கு நீ வழி காட்டு என்று போய்க் கடல் தீக்கொளுந்த
வாகைச் சிலைவளைத் தோன்மருகா! மயில் வாகனனே! (54)

ஆங்கா ரமும் அடங்கார்ஒடுங் கார் பரமானந்தத்தே
தேங்கார் நினைப்பும் மறப்பும் அறார் தினைப் போதளவும்
ஓங்காரத்(து) உள் ஒளிக்(கு) உள்ளே முருகன் உருவம் கண்டு
தூங்கார் தொழும்பு செய்யார் என் செய்வார்யம தூதருக்கே. (55)

கிழியும்படி அடல் குன்(று) எறிந்தோன் கவி கேட்(டு) உருகி
இழியும் கவிகற்றிடா(து) இருப்பீர்! எரிவாய் நரகக்
குழியும் துயரும் விடாய்ப் படக் கூற்றுவன் ஊர்க்குச் செல்லும்
வழியும் துயரும் பகரீர்! பகரீர்! மறந்தவர்க்கே. (56)

பொருபிடி யும்களி றும் விளை யாடும் புனச் சிறுமான்
தருபிடி காவல! ஷண்முகவா எனச் சாற்றிநித்தம்
இருபிடிசோறுகொண்(டு) இட்டுஉண்(டு) இருவினையோம் இறந்தால்
ஒரு பிடி சாம்பலும் காணாது மாய உடம்(பு) இதுவே. (57)

நெற்றாப் பசுங்கதிர்ச் செவ்வேநல் காக்கின்ற நீலவள்ளி
முற்றாத் தனத்திற்(கு) இனிய பிரான் இக்கு முல்லையுடன்
பற்றாக் கையும் வெந்து ஸங்க்ராம வேளும் படவிழியால்
செற்றார்க்(கு) இனியவன் தேவந்த்ர லோக சிகாமணியே. (58)

பொங்கார வேலையில் வேலைவிட்டோன் அருள்போல் உதவ
எங்காயினும் வரும் ஏற்பவர்க்(கு) இட்ட(து) இடாமல் வைத்த
வங்கா ரமும் உங்கள் சிங்கார வீடும் மடந்தையரும்
சங்காதமோ? கெடுவீர்! உயிர்போம் அத் தனி வழிக்கே. (59)

சிந்திக்கி லேனின்று ஸேவிக்கி லேன்தண்டைச் சிற்றடியை
வந்திக்கி லேன்ஒன்றும் வாழ்த்துகிலேன் மயில்வாகனனை
ஸந்திக்கிலேன் பொய்யை நிந்திக்கிலேன் உண்மை ஸாதிக்கிலேன்
புந்திக் கிலேசமும் காயக் கிலேசமும் போக்குதற்கே. (60)

வரை அற்(று) அவுணர் சிரம் அற்று வாரிதி வற்றச் செற்ற
புரை அற்ற வேலவன் போதித்தவா! பஞ்ச பூதமும் அற்(று)
உரைஅற்(று) உணர்(வு)அற்(று) உடல்அற்(று) உயிர்அற்(று)
உபாயம்அற்(று)க்
கரைஅற்(று) இருள் அற்(று) எனது அற்(று)இருக்கும்
அக்காட்சி அதே. (61)

ஆலுக்(கு) அணிகலம் வெண்தலை மாலை அகிலம் உண்ட
மாலுக்(கு) அணிகலம் தண் அம்துழாய் மயில் ஏறும் ஐயன்
காலுக்(கு) அணிகலம் வானோர் முடியும் கடம்பும் கையில்
வேலுக்(கு) அணிகலம் வேலையும் சூரனும் மேருவுமே. (62)

பாதித் திருஉருப் பச்செின் என்றவர்க்குத் தன் பாவனையைப்
போதித்த நாதனைப் போர்வேலனைச் சென்று போற்றி உய்யச்
சோதித்த மெய் அன்பு பொய்யோ? அழுது தொழு(து) உருகிச்
சாதித்த புத்தி வந்(து) எங்கே எனக்(கு) இங்ஙன் சந்தித்ததே. (63)

பட்டிக் கடாவில் வரும் அந்தகா! உனைப் பார் அறிய
வெட்டிப் புறங்கண்(டு) அலாது விடேன் வெய்ய சூரனைப் போய்
முட்டிப் பொருத செவ்வேள் பெரு மாள்திரு முன்பு நின்றேன்
கட்டிப் புறப்ப(டு)டா! சக்தி வாள் என்றன் கையதுவே. (64)

வெட்டுங்கடாமிசைத் தோன்றும்வெங் கூற்றன்விடும் கயிற்றால்
கட்டும் பொழுது விடுவிக்க வேண்டும் கராசலங்கள்
எட்டும் குலகிரி எட்டும்விட்(டு) ஓட எட்டாத வெளி
மட்டும் புதைய விரிக்கும் கலாப மயூரத்தனே! (65)

நீர்க்குமிழிக்கு நிகர் என்பர் யாக்கை நில்லாது செல்வம்
பார்க்கும் இடத்(து) அந்த மின் போலும் என்பர் பசித்து வந்தே
ஏற்கும் அவர்க்(கு) இட என்னின் எங்கேனும் எழுந்திருப்பார்
வேல்கும ரற்கன்(பு) இலாதவர் ஞான மிகவும் நன்றே. (66)

பெறுதற்(கு)அரிய பிறவியைப் பெற்றும்நின் சிற்றடியைக்
குறுகிப் பணிந்து பெறக்கற்றி லேன்மத கும்பகம்பத்
தறுகண் சிறுகண் ஸங்க்ராம சயில சரசவல்லி
இறுகத் தழுவும் கடகாசல பன்னிருபுயனே. (67)

சாடும் சமரத் தனிவேல் முருகன் சரணத்திலே
ஓடும் கருத்தை இருத்தவல்லார்க்(கு) யுகம் போய்ச் சகம் போய்ப்
பாடும் கவுரி பவுரி கொண்(டு) ஆடப் பசுபதி நின்(று)
ஆடும்பொழுது பரமாய் இருக்கும் அதீதத்திலே. (68)

தந்தைக்கு முன்னம் தனி ஞான வாள் ஒன்று சாதித்(து) அருள்
கந்தச் சுவாமி எனைத் தேற்றியபின்னர்க் காலன்வெம்பி
வந்(து) இப்பொழு(து) என்னை என்செய்யலாம்? சக்திவாளொன்றினால்
சிந்தத்துணிப்பன் தனிப்பெருங்கோப த்ரிசூலத்தையே. (69)

விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள் மெய்ம்மை குன்றா
மொழிக்குத் துணைமுருகா வெனும் நாமங்கள் முன்புசெய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலும் செங்கோடன் மயூரமுமே. (70)

துருத்தி எனும்படி கும்பித்து வாயுவைச் சுற்றிமுறித்து
அருத்தி உடம்பை ஒறுக்கில் என் ஆம்? சிவயோகம் என்னும்
குருத்தை அறிந்து முகம் ஆ(று) உடைக்குருநாதன் சொன்ன
கருத்தை மனத்திலிருத்துங் கண்டீர்! முக்தி கைகண்டதே. (71)

சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித் தோனை விளங்கு வள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக் கார்மயில் வாகனனைச்
சாந்துணைப் போதும் மறவாதவர்க்(கு) ஒரு தாழ்(வு) இல்லையே. (72)

போக்கும் வரவும் இரவும் பகலும் புறம்பும் உள்ளும்
வாக்கும் வடிவும் முடிவும் இல்லாது ஒன்று வந்து வந்து
தாக்கும் மனோலயம் தானே தரும் எனைத் தன் வசத்தே
ஆக்கும் அறுமுகவா சொல்லொண்ணா(து) இந்த ஆனந்தமே. (73)

அராப்புனை வேணியன் சேய் அருள் கொண்டு அவிழ்ந்த அன்பால்
குராப்புனை தண்டை அம்தாள் தொழல் வேண்டும் கொடிய ஐவர்
பராக்(கு) அறல் வேண்டும் மனமும் பதைப்(பு) அறல் வேண்டும் என்றால்
இராப்பகல் அற்ற இடத்தே இருக்கை எளிதல்லவே. (74)

படிக்கின்றிலை பழநித்திரு நாமம் படிப்பவர்தாள்
முடிக்கின்றிலை முருகாஎன் கிலைமுசி யாமலிட்டு
மிடிக்கின்றிலை பரமானந்தம் மேற்கொள விம்மி விம்மி
நடிக்கின்றிலை நெஞ்சமே! தஞ்சம் ஏது நமக்கினியே. (75)

கோடாத வேதனுக்(கு)யான் செய்த குற்றம் என? குன்று எறிந்த
தாடாளனே தென்தணிகைக் குமர நின் தண்டை அம்தாள்
சூடாத சென்னியும் நாடாத கண்ணும் தொழாத கையும்
பாடாத நாவு மெனக்கே தெரிந்து படைத்தனனே. (76)

சேல்வாங்கு கண்ணியர் வண்ணப் பயோதரம் சேர எண்ணி
மால் வாங்கி ஏங்கி மயங்காமல் வெள்ளி மலை எனவே
கால்வாங்கி நிற்கும் களிற்றான் கிழத்தி கழுத்தில் கட்டும்
நூல் வாங்கிடா(து) அன்று வேல் வாங்கி பூங்கழல் நோக்கு! நெஞ்சே! (77)

கூர்கொண்ட வேலனைப் போற்றாமல் ஏற்றம் கொண்டாடுவீர்காள்
போர்கொண்ட காலன் உமைக்கொண்டு போம் அன்று பூண்பனவும்
தார்கொண்ட மாதரும் மாளிகையும் பணச் சாளிகையும்
ஆர்கொண்டு போவார் ஐயோ கெடுவீர் நும்அறி(வு) இன்மையே. (78)

பந்தாடும் மங்கையர் செங்கயல் பார்வையில் பட்(டு) உழலும்
சிந்தா குலம்தனைத் தீர்(து) அருள்வாய் செய்யவேல் முருகா
கொந்தார் கடம்பு புடைசூழ் திருத்தணிக் குன்றில் நிற்கும்
கந்தா இளங்கும ராஅமராவதி காவலனே. (79)

மாகத்தை முட்டி வரும்நெடும் கூற்றுவன் வந்தால் என் முன்னே
தோகைப் புரவியில் தோன்றிநிற்பாய் சுத்த நித்த முக்தித்
தியாகப் பொருப்பைத் திரிபுராந்தகனைத் திரியம்பகனைப்
பாகத்தில் வைக்கும் பரம கல்யாணிதன் பாலகனே. (80)

தாரா கணம் எனும் தாய்மார் அறுவர் தரு முலைப்பால்
ஆரா(து) உமைமுலைப் பால்உண்ட பாலன் அரையில் கட்டும்
சீராவும் கையில் சிறுவாளும் வேலும் என் சிந்தையவே
வாரா(து) அகல்! அந்தகா வந்தபோ(து)உயிர் வாங்குவனே. (81)

தகட்டில் சிவந்த கடம்பையும் நெஞ்சையும் தாள் இணைக்கே
புகட்டிப் பணிய பணித்(து) அருளாய்! புண்டரீகன் அண்ட
முகட்டைப் பிளந்து வளர்ந்(து) இந்த்ர லோகத்தை முட்ட வெட்டிப்
பகட்டிற் பொருதிட்ட நிட்டூர சூர பயங்கரனே. (82)

தேங்கிய அண்டத்(து) இமையோர் சிறைவிடச் சிற்றடிக்கே
பூங்கழல் கட்டும் பெருமாள் கலாபப் புரவிமிசை
தாங்கி நடப்ப முறிந்தது சூரன் தளம் தனிவேல்
வாங்கி அனுப்பிடக் குன்றங்கள் எட்டும் வழி விட்டவே. (83)

மைவருங் கண்டத்தர் மைந்த கந்தா! என்று வாழ்த்தும் இந்தக்
கைவருந்தொண்(டு) அன்றிமற்(று)அறியேன்கற்ற கல்வியும் போய்ப்
பைவரும் கேளும் பதியும் கதறப் பழகிநிற்கும்
ஐவருங் கைவிட்டு மெய் விடும் போ(து)உன் அடைக்கலமே. (84)

காட்டில் குறத்தி பிரான் பதத்தே கருத்தைப் புகட்டின்
வீட்டில் புகுதல் மிகஎளி தேவிழி நாசிவைத்து
மூட்டிக் கபாலமூலாதார நேர் அண்ட மூச்சையுள்ளே
ஓட்டிப் பிடித்(து) எங்கும் ஓடாமல் சாதிக்கும் யோகிகளே! (85)

வேலா யுதன்சங்கு சக்ரா யுதன் விரிஞ்சன் அறியாச்
சூலா யுதன்தந்த கந்தச் சுவாமி சுடர்க்குடுமிக்
காலாயுதக்கொடி யோன் அருளாய கவசம் உண்(டு) என்
பாலாயுதம்வருமோ? யமனோடு பகைக்கினுமே. (86)

குமரா சரணம் சரணம் என்(று) அண்டர் குழாம் துதிக்கும்
அமரா வதியில் பெருமாள் திருமுகம் ஆறும் கண்ட
தமர் ஆகிவைகும் தனிஆன ஞான தபோதநர்க்(கு) இங்(கு)
எமராசன் விட்ட கடைஏடு வந்(து) இனி என் செயுமே. (87)

வணங்கித் துதிக்க அறியாத மனிதருடன் இணங்கிக்
குணங்கெட்ட துட்டனை ஈடேற்றுவாய் கொடியுங் கழுகும்
பிணங்கத் துணங்கை அலகை கொண்டாடப் பிசிதர்தம்வாய்
நிணம்கக்க விக்ரம வேலாயுதம் தொட்ட நிர்மலனே. (88)

பங்கேரு கன்எனைப் பட்(டு) ஓலையில் இடப் பண்டுதளை
தங்காலில் இட்ட(து) அறிந்தில னோ? தனி வேல் எடுத்துப்
பொங்கோதம் வாய்விடப் பொன்னஞ் சிலம்பு புலம்ப வரும்
எங்கோன் அறியின் இனி நான் முகனுக்(கு) இருவிலங்கே. (89)

மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியில்
சேலார் வயல்பொழிற் செங்கோடனைச் சென்று கண்டு தொழ
நாலாயிரங்கண் படைத்(து) இலனே அந்த நான்முகனே. (90)

கருமான் மருகனைச் செம்மான் மகளைக்களவு கொண்டு
வருமா குலவனைச் சேவல்கை கோளனை வானம் உய்யப்
பொருமா வினைச்செற்ற போர் வேலனைக் கன்னிப் பூகமுடன்
தருமா மருவுசெங் கோடனை வாழ்த்துகை சாலநன்றே. (91)

தொண்டர்கண்(டு)அண்டிமொண்(டு)உண்(டு) இருக்கும் சுத்தஞானம் என்னும்
தண்டையம் புண்டரிகம் தருவாய் சண்டதண்ட வெஞ்சூர்
மண்டலம் கொண்டுபண்(டு) அண்டர் அண்டம் கொண்டு மண்டிமிண்டக்
கண்(டு) உருண்(டு) அண்டரவிண்(டு) ஓடாமல்வேல் தொட்ட காவலனே! (92)

மண்கமழ் உந்தித் திருமால் வலம்புரி ஓசை அந்த
விண்கமழ் சோலையும் வாவியும் கேட்டது வேல் எடுத்துத்
திண்கிரி சிந்த விளையாடும் பிள்ளைத் திரு அரையிற்
கிண்கிணி ஓசை பதினா(லு) உலகமும் கேட்டதுவே. (93)

தெள்ளிய ஏனலில் கிள்ளையைக் கள்ளச் சிறுமி எனும்
வள்ளியை வேட்டவன் தாள்வேட் டிலைசிறு வள்ளை தள்ளித்
துள்ளிய கெண்டையைத் தொண்டையைத் தோதகச் சொல்லைநல்ல
வெள்ளிய நித்தில வித்தார மூரலை வேட்ட நெஞ்சே. (94)

யான்தான் எனும் சொல் இரண்டும் கெட்டால் அன்றி யாவருக்கும்
தோன்றாது சத்தியம் தொல்லைப் பெருநிலம் சூகரமாய்க்
கீன்றான் மருகன் முருகன் க்ருபாகரன் கேள்வியினால்
சான்றாரும் அற்ற தனிவெளிக் கேவந்து சந்திப்பதே. (95)

தடக்கொற்ற வேள்மயிலே இடர் தீரத் தனிவிடில் நீ
வடக்கில் கிரிக்(கு) அப்புறத்தும் நின்தோகையின் வட்டம் இட்டுக்
கடற்(கு) அப்புறத்தும் கதிர்க்(கு) அப்புறத்தும் கனகசக்ரத்
திடர்க்(கு) அப்புறத்தும் திசைக்(கு) அப்புறத்தும் திரிகுவையே. (96)

சேலில் திகழ்வயல் செங்கோடை வெற்பன் செழும்கலபி
ஆலித்(து) அனந்தன் பணாமுடி தாக்க அதிர்ந்(து) அதிர்ந்து
காலில் கிடப்பன மாணிக்க ராசியும் காசினியைப்
பாலிக்கு(ம்) மாயனும் சக்ராயுதமும் பணிலமுமே. (97)

கதிதனை ஒன்றையும் காண்கின்றி லேன்கந்த வேல்முருகா
நதிதனை அன்னபொய் வாழ்வில் அன்பாய் நரம்பால் பொதிந்த
பொதிதனையும் கொண்டு திண்டாடு மாறு எனைப் போதவிட்ட
விதிதனை நொந்து நொந்(து) இங்கே என்றன் மனம் வேகின்றதே. (98)

காவிக் கமலக் கழலுடன் சேர்த்(து) எனைக் காத்(து) அருளாய்
தூவிக் குலமயில் வாகன னேதுணை ஏதும் இன்றித்
தாவிப் படரக் கொழு கொம்பு (இ)லாத தனிக் கொடிபோல்
பாவித் தனி மனம் தள்ளாடி வாடிப் பதைக்கின்றதே. (99)

இடுதலைச் சற்றும் கருதேனைப் போதம் இலேனை அன்பால்
கெடுதல் இலாத்தொண் டரில்கூட்டியவா! கிரௌஞ்ச வெற்பை
அடுதலை சாதித்த வேலோன் பிறவி யறஇச்சிறை
விடுதலைப் பட்டது விட்டது பாச வினை விலங்கே. (100)

## நூற்பயன்

சலம்காணும் வேந்தர் தமக்கும் அஞ்சார்யமன்சண்டைக்(கு) அஞ்சார்
துலங்கா நரகக் குழி அணுகார் துட்ட நோயணுகார்
கலங்கார் புலிக்கும் கரடிக்கும் யானைக்கும் கந்தன் நன்னூல்
அலங்காரம் நூற்றுள் ஒருகவி தான் கற்று அறிந்தவரே. (101)

திருவடி யும்தண்டை யும்சிலபும்சிலம்(பு) ஊடுருவப்
பொருவடி வேலும் கடம்பும் தடம்புயம் (ஆறு)இரண்டும்
மருவடி வான வதனங்கள் ஆறும் மலர்க் கண்களும்
குருவடிவாய் வந்(து) என் உள்ளம் குளிரக் குடி கொண்டவே. (102)

இராப்பகல் அற்ற இடம்காட்டியான் இருந்தேதுதிக்கக்
குராப்புனை தண்டையந்தாள் அருளாய்கரி கூப்பிட்டநாள்
கராப்படக் கொன்(று) அக்கரி போற்ற நின்ற கடவுள்மெச்சும்
பராக்ரம வேல! நிருதசங்கார! பயங்கரனே! (103)

செங்கேழ் அடுத்த சினவடி வேலும் திருமுகமும்
பங்கே நிறைந்தநல் பன்னிரு தோளும் பதுமமலர்க்
கொங்கே தரளம் சொரியுஞ்செங் கோடைக் குமரன்என
எங்கே நினைப்பினும் அங்கே என் முன் வந்து எதிர் நிற்பனே. (104)

ஆவிக்கு மோசம் வரும் ஆ(று) அறிந்(து) உன் அருள்பதங்கள்
சேவிக்க என்று(ம்) நினைக்கின்றி லேன்வினை தீர்த்(து) அருளாய்!
வாவித் தடவயல் சூழும் திருத்தணி மாமலைவாழ்
சேவல் கொடியுடையானே அமர சிகாமணியே. (105)

கொள்ளித் தலையில் எறும்(பு) அது போல் குலையும் என்றன்
உள்ளத்துயரை ஒழித்(து) அருளாய் ஒரு கோடிமுத்தம்
தெள்ளிக் கொழிக்கும் கடற்செந்தில் மேவிய சேவகனே
வள்ளிக்கு வாய்த்தவனே மயிலேறிய மாணிக்கமே. (106)

சூலம் பிடித்(து) எம பாசம் சுழற்றித் தொடர்ந்து வரும்
காலன் தனக்குஒரு காலும் அஞ்சேன் கடல் மீ(து) எழுந்த
ஆலம் குடித்த பெருமான் குமாரன் அறுமுகவன்
வேலும் திருக்கையும் உண்டேநமக்(கு) ஒரு மெய்த்துணையே. (107)

**கந்தர் அலங்காரம் முற்றிற்று.**

## வாழ்த்துப் பா

ஆறிரு தடந்தோள் வாழ்க
அறுமுகம் வாழ்க வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க
குக்குடம் வாழ்க செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க
யானைதன் அணங்கு வாழ்க
மாறிலா வள்ளி வாழ்க
வாழ்கசீர் அடியார் எல்லாம்

— கந்தபுராணம்

ஓம் சரவணபவ

ஸ்ரீ அருணகிரிநாதர் அருளிய

# கந்தர் அனுபூதி

## காப்பு

நெஞ்சக் கனகல்லு நெகிழ்ந்(து) உருகத்
தஞ்சத்(து) அருள் சண்முகனுக்(கு) இயல்சேர்
செஞ்சொல் புனைமாலை சிறந் திடவே
பஞ்சக் கரஆனை பதம் பணிவாம்.

ஆடும் பரிவேல் அணிசேவல்எனப்
பாடும் பணியே பணியா அருள்வாய்
தேடும் கயமா முகனைச் செருவில்
சாடும் தனியா னைசகோ தரனே. (1)

உல்லாச நிராகுல யோக விதச்
சல்லாப வினோ தனும்நீ யலையோ?
எல்லாம் அறஎன்னை இழந்த நலம்
சொல்லாய் முருகா! சுரபூ பதியே. (2)

வானோ புனல்பார் கனல்மா ருதமோ
ஞானோ தயமோ நவில்நான் மறையோ
யானோ மனமோ எனைஆண்ட இடம்
தானோ பொருளா வதுசண் முகனே. (3)

வளைபட்ட கைம்மா தொடுமக் கள்எனும்
தளைபட்(டு) அழியத் தகுமோ? தகுமோ?
கிளைபட்(டு) எழுசூர் உரமும் கிரியும்
தொளைபட்(டு) உருவத் தொடுவே லவனே. (4)

மகமா யைகளைந் திடவல்ல பிரான்
முகமா றும்ஒழிந் தும்ஒழிந் திலனே
அகமாடை மடந்தையர் என்(று) அயரும்
சகமா யையுள்நின் றுதயங் குவதே. (5)

திணியான மனோசிலை மீ(து) உனதாள்
அணியார் அரவிந்தம் அரும்பும் அதோ?
பணியா வெனவள்ளி பதம் பணியும்
தணியா அதிமோ கதயா பரனே. (6)

கெடுவாய் மனனே! கதிகேள் கரவா(து)
இடுவாய் வடிவேல் இறைதாள் நினைவாய்!
சுடுவாய் நெடுவே தனைதூள் படவே
விடுவாய் விடுவாய் வினையா வையுமே. (7)

அமரும் பதிகேள் அகமாம் எனும்இப்
பிமரம் கெடமெய்ப் பொருள்பே சியவா!
குமரன்! கிரிராச குமாரி மகன்
சமரம் பொருதா னவநா சகனே. (8)

மட்டூர் குழல்மங் கையர்மை யல்வலைப்
பட்டூ சல்படும் பரிசென்(று) ஒழிவேன்;
தட்டூ(டு) அறவேல் சயிலத் தெறியும்
நிட்டூர! நிராகுல! நிர்ப் பயனே. (9)

கார்மா மிசைகா லன்வரின் கலபத்
தேர்மா மிசைவந்(து) எதிரப் படுவாய்
தார்மார்ப! வலார்இத லாரி எனும்
சூர்மா மடியத் தொடுவே லவனே. (10)

கூகா எனஎன் கிளைகூ டிஅழப்
போகா வகைமெய்ப் பொருள்பே சியவா!
நாகாசல! வேலவ! நாலு கவித்
தியாகா! சுரலோ கசிகா மணியே. (11)

செம்மான் மகளைத் திருடும் திருடன்
பெம்மான் முருகன் பிறவான் இறவான்
சும்மா இருசொல் அறஎன் றலுமே
அம்மா பொருள்ஒன் றும்அறிந் திலனே. (12)

முருகன் தனிவேல் முனிநம் குருஎன்(று)
அருள்கொண்(டு) அறியார் அறியும் தரமோ?
உருவன்(று) அருவன்(று) உளதன்(று) இலதன்(று)
இருளன்(று) ஒளியன்(று) எனநின் றதுவே. (13)

கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்(று)
உய்வாய் மனனே! ஒழிவாய்; ஒழிவாய்;
மெய்வாய் விழிநா சியொடும் செவியாம்
ஐவாய் வழிசெல் லும்அவா வினையே. (14)

முருகன் குமரன் குகன்என்று மொழிந்(து)
உருகும் செயல்தந்(து) உணர்வென்(று) அருள்வாய்;
பொருபுங் கவரும் புவியும் பரவும்
குருபுங் கவ! எண் குணபஞ் சரனே. (15)

பேரா சைஎனும் பிணியில் பிணிபட்டு
ஓரா வினையேன் உழலத் தகுமோ?
வீரா! முதுசூர் படவேல் எறியும்
சூரா! சுரலோ கதுரந் தரனே. (16)

யாம்ஓ தியகல் வியும்எம் அறிவும்
தாமே பெறவே லவர்தந் ததனால்
பூமேல் மயல்போய் அறம்மெய்ப் புணர்வீர்!
நாமேல் நடவீர்! நடவீர்! இனியே. (17)

உதியா மரியா உணரா மறவா
விதிமால் அறியா விமலன் புதல்வா!
அதிகா! அனகா! அபயா! அமரா
வதிகா வல!சூ ரபயங் கரனே. (18)

வடிவும் தனமும் மனமும் குணமும்
குடியும் குலமும் குடிபோ கியவா;
அடியந் தமிலா அயில்வேல் அரசே!
மிடியென்(று) ஒருபாவி வெளிப் படினே. (19)

அரிதா கியமெய்ப் பொருளுக்(கு) அடியேன்
உரிதா உபதே சம்உணர்த் தியவா!
விரிதாரண! விக்ரம! வேள்! இமையோர்
புரிதா ரக!நாக புரந் தரனே. (20)

கருதா மறவா நெறிகாண எனக்கு
இருதாள் வனசந் தரஎன்(று) இசைவாய்?
வரதா! முருகா! மயில்வா கனனே!
விரதா! சுரசூர! விபா டணனே. (21)

காளைக் குமரே சன்எனக் கருதித்
தாளைப்பணியத் தவம்எய் தியவா;
பாளைக் குழல்வள் ளிபதம் பணியும்
வேளைச் சுரபூ பதிமே ருவையே. (22)

அடியைக் குறியா(து) அறியா மையினால்
முடியக் கெடவோ? முறையோ முறையோ?
வடிவிக் ரமவேல் மகிபா! குறமின்
கொடியைப் புணரும் குணபூ தரனே. (23)

கூர்வேல் விழிமங் கையர்கொங் கையிலே
சேர்வேன் அருள்சே ரவும்எண் ணுமதோ?
சூர்வே ரொடுகுன்று தொளைத்த நெடும்
போர்வே ல!புரந் தர!பூ பதியே. (24)

மெய்யே எனவெவ் வினைவாழ் வைஉகந்(து)
ஐயோ! அடியேன் அலையத் தகுமோ?
கையோ அயிலோ கழலோ முழுதும்
செய்யோய்! மயிலே றியசே வகனே! (25)

ஆதா ரம்இலேன் அருளைப் பெறவே
நீதான் ஒருசற் றும்நினைந் திலையே
வேதா கம!ஞான வினோத! மனோ
தீதா! சுரலோ கசிகா மணியே. (26)

மின்னே நிகர்வாழ் வைவிரும் பியயான்
என்னே விதியின் பயன்இங்(கு) இதுவோ?
பொன்னே! மணியே! பொருளே! அருளே!
மன்னே! மயிலே றியவா னவனே. (27)

ஆனா அமுதே! அயில்வேல் அரசே!
ஞானா கரனே! நவிலத் தகுமோ?
யானா கியஎன் னைவிழுங் கிவெறும்
தானாய் நிலைநின் றதுதற் பரமே. (28)

இல்லே யெனும்மா யையில்இட் டனை;நீ
பொல்லேன் அறியா மைபொறுப் பதிலையோ;
மல்லே புரிபன் னிருவா குவில்என்
சொல்லே புனையும் சுடர்வே லவனே. (29)

செவ்வான் உருவில் திகழ்வே லவன்அன்(று)
ஒவ்வா த(து)என உணர்வித் ததுதான்
அவ்வா(று) அறிவார் அறிகின் றதலால்
எவ்வா(று) ஒருவர்க்(கு) இசைவிப் பதுவே. (30)

பாழ்வாழ் வுஎனும் இப்படுமா யையிலே
வீழ்வாய் எனஎன் னைவிதித் தனையே
தாழ்வா னவைசெய் தனதாம் உளவோ?
வாழ்வாய் இனிநீ; மயில்வா கனனே. (31)

கலையே பதறிக் கதறித் தலையூ(டு)
அலையே படுமா(று) அதுவாய் விடவோ?
கொலையே புரிவே டர்குலப் பிடிதோய்
மலையே! மலைகூ றிடுவா கையனே. (32)

சிந்தா குலஇல் லொடுசெல் வம்எனும்
விந்தா டவிஎன் றுவிடப் பெறுவேன்
மந்தா கினிதந் தவரோ தயனே!
கந்தா! முருகா! கருணா கரனே! (33)

சிங்கார மடந்தை யர்தீ நெறிபோய்
மங்கா மல்எனக் குவரம் தருவாய்
சங்க்ராம சிகாவல! சண் முகனே!
கங்கா நதிபால! க்ருபா கரனே! (34)

விதிகா ணும்உடம் பைவிடா வினையேன்
கதிகா ணமலர்க் கழல்என்(று) அருள்வாய்
மதிவாள் நுதல்வள் ளியைஅல் லதுபின்
துதியா விரதா! சுரபூ பதியே. (35)

நாதா! குமரா! நமஎன்(று) அரனார்
ஓதாய் எனஓ திய(து)எப் பொருள்தான்?
வேதா முதல்விண் ணவர்சூ டுமலர்ப்
பாதா! குறமின் பதசே கரனே. (36)

கிரிவாய் விடுவிக் ரமவேல் இறையோன்
பரிவா ரம்எனும் பதம்மே வலையே
புரிவாய், மனனே! பொறையாம் அறிவால்
அரிவாய் அடியோ டும்அகந் தையையே. (37)

ஆதா ளியைஒன்(று) அறியே னைஅறத்
தீதா ளியைஆண் டதுசெப் புமதோ?
கூதாள! கிராத குலிக்கு இறைவா!
வேதா ளகணம் புகழ்வே லவனே! (38)

மாவேழ் சனனம் கெடமா யைவிடா
மூவே டணைஎன் றுமுடிந் திடுமோ?
கோவே! குறமின் கொடிதோள் புணரும்
தேவே! சிவசங் கரதே சிகனே. (39)

வினையோ டவிடும் கதிர்வேல் மறவேன்
மனையோடு தியங்கி மயங் கிடவோ?
சுனையோ(டு) அருவித் துறையோடு பசுந்
தினையோ(டு) இதனோ டுதிரிந் தவனே. (40)

சாகா(து) எனையே சரணங் களிலே
காகா நமனார் கலகம் செயுநாள்
வாகா! முருகா! மயில்வா கனனே!
யோகா! சிவஞா னோபதே சிகனே. (41)

குறியைக் குறியா துகுறித் தறியும்
நெறியைத் தனிவே லைநிகழ்த் திடலும்
செறிவற்(று) உலகோ(டு) உரைசிந் தையும்அற்(று)
அறிவற்(று) அறியா மையும்அற் றதுவே. (42)

தூசா மணியும் துகிலும் புனைவாள்
நேசா! முருகா நின(து)அன்(பு) அருளால்
ஆசா நிகளம் துகள்ஆ யினபின்
பேசா அனுபூ திபிறந் ததுவே. (43)

சாடும் தனிவேல் முருகன் சரணம்
சூடும் படிதந் ததுசொல் லுமதோ?
வீடும் சுரர்மா முடிவே தமும்வெங்
காடும் புனமும் கமழும் கழலே. (44)

கரவா கியகல் விஉளார் கடைசென்(று)
இரவா வகைமெய்ப் பொருள்ஈ குவையோ?
குரவா! குமரா! குலிசா யுத!குஞ்
சரவா! சிவயோக! தயா பரனே. (45)

எந்தா யும்எனக் கருள்தந் தையும்நீ;
சிந்தா குலமா னவைதீர்த்(து) எனையாள்;
கந்தா! கதிர்வே லவனே! உமையாள்
மைந்தா! குமரா! மறைநா யகனே. (46)

ஆறா றையும்நீத்(து) அதன்மேல் நிலையைப்
பேறா அடியேன் பெறுமா(று) உளதோ?
சீறா வருசூர் சிதைவித்(து) இமையோர்
கூறா உலகம் குளிர்வித் தவனே. (47)

அறிவொன்(று) அறநின்(று) அறிவோர் அறிவில்
பிறிவொன்(று) அறநின் றபிரா னலையோ?
செறிவொன்(று) அறவந்(து) இருளே சிதைய
வெறிவென்(று) அவரோ(டு) உறும்வே லவனே. (48)

தன்னம் தனிநின்(று) அதுதான் அறிய
இன்னம் ஒருவர்க்(கு) இசைவிப் பதுவோ?
மின்னும் கதிர்வேல் விகிர்தா! நினைவார்
கின்னம் களையும் க்ருபைசூழ் சுடரே. (49)

மதிகெட்(டு) அறவாடி மயங்கி அறக்
கதிகெட்(டு) அவமே கெடவோ கடவேன்?
நதிபுத் திர!ஞா னசுகா திப!அத்
திதிபுத் திரர்வீ றடுசே வகனே. (50)

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாயக்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே. (51)

**கந்தர் அநுபூதி முற்றிற்று.**



## வாழ்த்துப் பா

பன்னிரு காத்தாய்! போற்றி
பசும்பொன்மா மயிலாய்! போற்றி
முன்னிய கருணை ஆறு
முகப் பரம் பொருளே போற்றி
கன்னியர் இருவர் நீங்காக்
கருணைவா ரிதியே! போற்றி
என்னிரு கண்ணே! கண்ணுள்
இருக்குமா மணியே! போற்றி

– திருச்செந்தூர்புராணம்



ஓம் சரவணபவ

ஸ்ரீ நக்கீரதேவர் அருளிய

# திருமுருகாற்றுப்படை

## 1. திருப்பரங்குன்றம்

### ஆசிரியப்பா

உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு
பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டு ஆ அங்கு
ஓவற இமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி;
உறுநர்த் தாங்கிய மதன்உடை நோன்தாள்.
செறுநர்த் தேய்த்த செல்உறழ் தடக்கை.

மறுவில் கற்பின் வாள்நுதல் கணவன்;
கார்கோள் முகந்த கமம்சூல் மாமழை
வாள்போழ் விசும்பில் வள்உறை சிதறித்
தலைப்பெயல் தலைஇய தன்நறும் கானகத்து,
இருள்படப் பொதுளிய பராரை மரா அத்து

உருள்பூந் தண்தார் புரளும் மார்பினன்;
மால்வரை நிவந்த சேண்உயர் வெற்பில்
கிண்கிணி கவை இய ஒண்செஞ் சீறடிக்
கணைக்கால், வாங்கிய நுசுப்பின், பணைத்தோள்,
கோபத்து அன்ன தோயாப் பூந்துகில்,

பல்காசு நிரைத்த சில்காழ் அல்குல்,
கைபுனைந்து இயற்றாக் கவின்பெறு வனப்பின்,
நாவலொடு பெயரிய பொலம்புனை அவிர் இழைச்
சேண்இகந்து விளங்கும் செயிர்தீர் மேனித்;
துணையோர் ஆய்ந்த இணையீர் ஓதிச்

செங்கால் வெட்சிச் சீறிதழ் இடையிடுபு
பைந்தாள் குவளைத் தூஇதழ் கிள்ளித்
தெய்வ உத்தியொடு வலம்புரி வயின்வைத்துத்
திலகம் தைஇய தேம்கமழ் திருநுதல்
மகரப் பகுவாய் தாழ மண்ணுறுத்துத்

துவர முடித்த துகள் அறு முச்சிப்
பெருந்தண் சண்பகம் செரீ இக், கருந்தகட்டு
உளைப்பூ மருதின் ஒள்இணர் அட்டிக்
கிளைக்கவின்று எழுதரு கீழ்நீர்ச் செவ்அரும்பு
இணைப்புறு பிணையல் வளைஇத், துணைத்தக.

வண்காது நிறைந்த பிண்டி ஒண்தளிர்
நுண்பூண் ஆகம் திளைப்பத் திண்காழ்
நறுங்குறடு உரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை
தேங்கமழ் மருதிணர் கடுப்பக், கோங்கின்
குவிமுகிழ் இளமுலைக் கொட்டி, விரிமலர்.

வேங்கை நுண்தாது அப்பிக் காண்வர
வெள்ளில் குறுமுறி கிள்ளுபு தெறியாக்,
கோழி ஓங்கிய வென்று அடு விறல்கொடி
வாழிய பெரிது என்று ஏத்திப், பலருடன்
சீர்திகழ் சிலம்பகம் சிலம்பப் பாடிச்,

சூர்அர மகளிர் ஆடும்சோலை;
மந்தியும் அறியா மரன்பயில் அடுக்கத்துச்
சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தள்
பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்;
பார்முதிர் பனிக்கடல் கலங்கஉள் புக்குச்

சூர்முதல் தடிந்த சுடர் இலை நெடுவேல்
உலறிய கதுப்பின் பிறழ்பல் பேழ்வாய்ச்
சுழல்விழிப் பசுங்கண் சூர்த்த நோக்கின்
கழல்கண் கூகையோடு கடும்பாம்பு தூங்கப்
பெருமுலை அலைக்கும் காதில், பிணர்மோட்டு

உருகெழு செலவின் அஞ்சுவரு பேய்மகள்,
குருதி ஆடிய கூர்உகிர்க் கொடுவிரல்
கண்தொட்டு உண்ட கழிமுடைக் கருந்தலை
ஒண்தொடித் தடக்கையின் ஏந்தி வெருவர,
வென்று அடு விறல்களம் பாடித் தோள்பெயரா,

நிணம்தின் வாயள் துணங்கை தூங்க,
இருபேர் உருவின் ஒருபேர் யாக்கை
அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி
அவுணர் நல்வலம் அடங்கக், கவிழ்இணர்
மாமுதல் தடிந்த மறுஇல் கொற்றத்து.

எய்யா நல்இசைச் செவ்வேல் சேஎய்
சேவடி படரும் செம்மல் உள்ளமொடு,
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந்து உறையும்
செலவுநீ நயந்தனை ஆயின், பலவுடன்
நன்னர் நெஞ்சத்து இன்னசை வாய்ப்ப

இன்னே பெறுதிநீ முன்னிய வினையே,
செருப் புகன்று எடுத்த சேண்உயர் நெடுங்கொடி
வரிப்புனை பந்தொடு பாவை தூங்கப்
பொருநர்த் தேய்த்த போர்அரு வாயில்,
திருவீற் றிருந்த தீதுதீர் நியமத்து.

மாடம்மலி மறுகில் கூடல் குடவயின்,
இருஞ்சேற்று அகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த
முள்தாள் தாமரைத் துஞ்சி, வைகறைக்
கள்கமழ் நெய்தல் ஊதி, எல்படக்
கண்போல் மலர்ந்த காமர் சுனைமலர்

அம்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்
குன்று அமர்ந்து உறைதலும் உரியன்; அதா அன்று;



## 2. திருச்சீரலைவாய்

வைந்நுதி பொருத வடு ஆழ் வரிநுதல்
வாடா மாலை ஓடையொடு துயல்வரப்,
படுமணி இரட்டும் மருங்கின், கடுநடைக்

கூற்றத்து அன்ன மாற்றருதொரு மொய்ம்பின்
கால்கிளர்ந்து அன்ன வேழமேல் கொண்டு,
ஐவேறு உருவின் செய்வினை முற்றிய
முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி
மின்உறழ் இமைப்பின் சென்னிப் பொற்ப;

நகைதாழ்பு துயல்வரூஉம் வகை அமை பொலங்குழை
சேண்விளங்கு இயற்கை வாண்மதி கவைஇ
அகலா மீனின் அவிர்வன இமைப்பத்;
தாவுஇல் கொள்கைத் தம்தொழில் முடிமார்
மனன் நேர்பு எழுதரு வாள்நிற முகனே;

மா இருள் ஞாலம் மறுஇன்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம்; ஒருமுகம்
ஆர்வலர் ஏத்த அமர்ந்தினிது ஒழுகிக்
காதலின் உவந்து வரம்கொடுத் தன்றே; ஒருமுகம்
மந்திர விதியின் மரபுளி வழாஅ

அந்தணர் வேள்விஓர்க் கும்மே; ஒருமுகம்
எஞ்சிய பொருள்களை ஏம்உற நாடித்
திங்கள் போலத் திசை விளக்கும்மே; ஒருமுகம்
செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக்
கறுவுகொள் நெஞ்சமொடு களம் வேட்டன்றே; ஒருமுகம்.

குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகை அமர்ந்தன்றே; ஆங்கம்
மூவிரு முகனும் முறைநவின்று ஒழுகலின்,
ஆரம் தாழ்ந்த அம்பகட்டு மார்பில்
செம்பொறி வாங்கிய மொய்ம்பின் சுடர்விடுபு.

வண்புகழ் நிறைந்து வசிந்து வாங்கு நிமிர்தோள்,
விண்செலல் மரபின் ஐயர்க்கு ஏந்தியது
ஒருகை; உக்கம் சேர்த்தியது ஒருகை;
நலம்பெறு கலிங்கத்துக் குரங்கின்மிசை அசைஇயது ஒருகை;
அங்குசம் கடாவ ஒருகை; இருகை

ஐயிரு வட்டமொடு எஃகுவலம் திரிப்ப! ஒருகை
மார்பொடு விளங்க; ஒருகை
தாரொடு பொலிய; ஒருகை
கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப; ஒருகை
பாடுஇன் படுமணி இரட்ட; ஒருகை

நீல்நிற விசும்பின் மலிதுளி பொழிய; ஒருகை
வான் அர மகளிர்க்கு வதுவை சூட்ட; ஆங்கப்
பன்னிரு கையும் பால்பட இயற்றி,
அந்தரப் பல்இயம் கறங்கத் திண்காழ்
வயிர் எழுந்து இசைப்ப, வால்வளை நரல,

உரம்தலைக் கொண்ட உரும்இடி முரசமொடு
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி அகவ,
விசும்பு ஆறாக விரைசெலல் முன்னி;
உலகம் புகழ்ந்த ஓங்குஉயர் விழுச்சீர்
அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே அதா அன்று;



## 3. திருவாவினன்குடி

சீரை தைஇய உடுக்கையர், சீரொடு
வலம்புரி புரையும் வால்நரை முடியினர்,
மாசு அற இமைக்கும் உருவினர், மானின்
உரிவை தைஇய ஊன்கெடு மார்பின்
என்பு எழுந்து இயங்கும் யாக்கையர், நன்பகல்

பலவுடன் கழிந்த உண்டியர், இகலொடு
செற்றம் நீக்கிய மனத்தினர், யாவதும்
கற்றோர் அறியா அறிவினர், கற்றோர்க்குத்
தாம்வரம்பு ஆகிய தலைமையர், காமமொடு
கடுஞ்சினம் கடிந்த காட்சியர், இடும்பை.

யாவதும் அறியா இயல்பினர் மேவரத்,
துனிஇல் காட்சி முனிவர் முன்புகப்,
புகைமுகந்து அன்ன மாசில் தூஉடை,
முகைவாய் அவிழ்ந்த தகைசூழ் ஆகத்துச்,
செவிநேர்பு வைத்த செய்வுறு திவவின்.

நல்லியாழ் நவின்ற நயனுடை நெஞ்சின்
மென்மொழி மேவலர் இன்னரம்பு உளர,
நோய்இன்று இயன்ற யாக்கையர், மாவின்
அவிர்தளிர் புரையும் மேனியர், அவிர்தொறும்
பொன்உரை கடுக்கும் திதலையர், இன்னகைப்

பருமம் தாங்கிய பணிந்து ஏந்து அல்குல்
மாசுஇல் மகளிரொடு மறுஇன்றி விளங்கக்
கடுவொடு ஒடுங்கிய தூம்பு உடை வால்எயிற்று
அழல் என உயிர்க்கும் அஞ்சுவரு கடுந்திறல்
பாம்புபடப் புடைக்கும் பல்வரிக் கொடும் சிறைப்

புள் அணி நீள்கொடிச் செல்வனும், வெள்ஏறு
வலவயின் உயரிய பலர்புகழ் திணிதோள்
உமைஅமர்ந்து விளங்கும் இமையா முக்கண்
மூஎயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்
நூற்றுப் பத்து அடுக்கிய நாட்டத்து, நூறுபல்

வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்து,
ஈரிரண்டு ஏந்திய மருப்பின் எழில்நடைத்
தாழ்பெருந் தடக்கை உயர்த்த யானை
எருத்தம் ஏறிய திருக்கிளர் செல்வனும்,
நாற்பெருந் தெய்வத்து நல்நகர் நிலைஇய.

உலகம் காக்கும் ஒன்றுபுரி கொள்கைப்
பலர்புகழ் மூவரும் தலைவர் ஆக,
ஏம்உறு ஞாலம் தன்னில் தோன்றித்
தாமரை பயந்த தாவில்ஊழி
நான்முக ஒருவற் சுட்டிக் காண்வரப்,

பகலில் தோன்றும் இகல்இல் காட்சி
நால்வேறு இயற்கைப் பதினொரு மூவரொடு,
ஒன்பதிற்று இரட்டி உயர்நிலை பெறீஇயர்;
மீன்பூத்து அன்ன தொன்றலர்; மீன்சேர்பு
வளிகிளர்ந்து அன்ன செலவினர், வளியிடைத்

தீ எழுந்து அன்ன திறலினர், தீப்பட
உரும் இடித்து அன்ன குரலினர், விழுமிய
உறுகுறை மருங்கில் தம் பெறுமுறை கொண்மார்.
அந்தரக் கொட்பினர் வந்துடன் காணத்
தாஇல் கொள்கை மடந்தையொடு சின்னாள்

ஆவின்குடி அசைதலும் உரியன்; அதா அன்று;



## 4. திருவேரகம்

இருமூன்று எய்திய இயல்பினின் வழா அது
இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி,
அறுநான்கு இரட்டி இளமைநல் யாண்டு
ஆறினில் கழிப்பிய அறன் நவில் கொள்கை,

மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்து,
இருபிறப் பாளர் பொழுதறிந்து நுவல,
ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞாண்,
புலராக் காழகம் புலர உடீஇ,
உச்சிக் கூப்பிய கையினர், தற்புகழ்ந்து

ஆறெழுத்து அடக்கிய அருமறைக் கேள்வி
நாஇயல் மருங்கின் நவிலப் பாடி,
விரையுறு நறுமலர் ஏந்திப், பெரிதுஉவந்து
ஏரகத்து உறைதலும் உரியன்; அதா அன்று;



# 5. குன்றுதோறாடல்

பைங்கொடி நறைக்காய் இடைஇடுபு, வேலன்

அம்பொதிப் புட்டில் விரைஇக், குளவியொடு
வெண்கூ தாளம் தொடுத்த கண்ணியன்;
நறும்சாந்து அணிந்த கேழ்கிளர் மார்பின்
கொடுந்தொழில் வல்வில் கொலைஇய கானவர்,
நீடுஅமை விளைந்த தேக்கள் தேறல்

குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து
தொண்டகச் சிறுபறைக் குரவை அயர,
விரல்உளர்ப்பு அவிழ்ந்த வேறுபடு நறுங்கால்
குண்டுசுனை பூத்த வண்டுபடு கண்ணி,
இணைத்த கோதை அணைத்த கூந்தல்,

முடித்த குல்லை இலையுடை நறும்பூச்
செங்கால் மரா அத்த வால்இணர் இடைஇடுபு
சுரும்புணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை
திருந்துகாழ் அல்குல் திளைப்ப உடீஇ,
மயில்கண் டன்ன மடநடை மகளிராடு

செய்யன் சிவந்த ஆடையன், செவ் அரைச்
செயலைத் தண்தளிர் துயல்வரும் காதினன்,
கச்சினன், கழலினன், செச்சைக் கண்ணியன்,
குழலன், கோட்டன், குறும்பல் இயத்தன்,
தகரன், மஞ்ஞையன், புகரில் சேவலம்

கொடியன், நெடியன், தொடிஅணி தோளன்;
நரம்பு ஆர்த்து அன்ன இன்குரல் தொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறும்தண் சாயல்
மருங்கில் கட்டிய நிலன்நேர்பு துகிலினன்,

முழுவுஉறழ் தடக்கையின் இயல் ஏந்தி,
மென்தோள் பல்பிணை தழீஇத் தலைத்தந்து,
குன்றுதோ றாடலும் நின்றதன் பண்பே; அதா அன்று;

# 6. பழமுதிர்ச் சோலை

சிறுதினை மலரொடுவிரைஇ, மறி அறுத்து,
வாரணக் கொடியொடு வயின்பட நிறீஇ,
ஊர்ஊர் கொண்ட சீர்கெழு விழவினும்,

ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும்,
வேலன் தைஇய வெறிஅயர் களனும்,
காடும், காவும் கவின்பெறு துருத்தியும்,
யாறும், குளனும், வேறுபல் வைப்பும்,
சதுக்கமும், சந்தியும், புதுப்பூங் கடம்பும்

மன்றமும், பொதியிலும், கந்துடை நிலையினும்,
மாண்தலைக் கொடியோடு மண்ணி அமைவர,
நெய்யொடு ஐயவி அப்பி, ஐதுரைத்து,
குடந்தம் பட்டுக் கொழுமலர் சிதறி,
முரண்கொள் உருவின் இரண்டுடன் உடீஇச்,

செந்நூல் யாத்து, வெண்பொரி சிதறி,
மதவலி நிலைஇய மாத்தாள் கொழுவிடைக்
குருதியொடு விரைஇய தூவெள் அரிசி
சில்பலிச் செய்து, பல்பிரப்பு இரீஇச்,
சிறுபசு மஞ்சளொடு நறுவிரை தெளித்துப்

பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை
துணையற அறுத்துத், தூங்க நாற்றி,
நளிமலைச் சிலம்பின் நல்நகர் வாழ்த்தி,
நறும்புகை எடுத்துக் குறிஞ்சி பாடி
இமிழ்இசை அருவியொடு இன்னியம் கறங்க,

உருவப் பல்பூத் தூஉய் வெருவரக்
குருதிச் செந்தினை பரப்பிக், குறமகள்
முருகியம் நிறுத்து, முரணினர் உட்க,
முருகாற்றுப் படுத்த உருகெழு வியனகர்,
ஆடுகளம் சிலம்பப் பாடிப், பலவுடன்

கோடுவாய் வைத்துக் கொடுமணி இயக்கி,
ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி,
வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட,
ஆண்டாண்டு உறைதலும் அறிந்த வாறே,
ஆண்டாண்டு ஆயினும் ஆக; காண்தக

முந்து நீ கண்டுழி முகன் அமர்ந்து ஏத்திக்,
கைதொழூஉப் பரவிக் காலுற வணங்கி
"நெடும்பெரும் சிமயத்து நீலப் பைஞ்சுனை,
ஐவருள் ஒருவன் அங்கை ஏற்ப,
அறுவர் பயந்த ஆறு அமர் செல்வ!

ஆல்கெழு கடவுள் புதல்வ! மால்வரை
மலைமகள் மகனே! மாற்றோர் கூற்றே!
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ!
இழையணி சிறப்பின் பழையோள் குழவி!
வானோர் வணங்குவில் தானைத் தலைவ!

மாலை மார்ப! நூலறி புலவ!
செருவில் ஒருவ! பொருவிறல் மள்ள!
அந்தணர் வெறுக்கை! அறிந்தோர் சொல்மலை!
மங்கையர் கணவ! மைந்தர் ஏறே!
வேல்கெழு தடக்கைச் சால்பெரும் செல்வ!

குன்றம் கொன்ற குன்றாக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ!
பலர்புகழ் நன்மொழிப் புலவர் ஏறே!
அரும்பெறல் மரபின் பெரும் பெயர் முருக!
நசையிநர்க்கு ஆர்த்தும் இசைபே ராளா!

அலர்ந்தோர்க்கு அளிக்கும் பொலம்பூண் சேஎய்!
மண்டு அமர் கடந்தநின் வென்று ஆடு அகலத்துப்
பரிசிலர்த் தாங்கும் உருகெழு நெடுவேள்!
பெரியோர் ஏத்தும் பெரும்பெயர் இயவுள்;
சூர்மருங்கு அறுத்த மொய்ம்பின் மதவலி!

போர்மிகு பொருந! குரிசில்! எனப்பல
யான் அறி அளவையின் ஏத்தி, ஆனாது,
நின் அளந்து அறிதல் மன்உயிர்க்கு அருமையின்,
நின்அடி உள்ளி வந்தெனன்; நின்னொடு
புரையுநர் இல்லாப் புலமையோய் எனக்

குறித்தது மொழியா அளவையில், குறித்துடன்
வேறுபல் உருவின் குறும்பல் கூளியர்
சாறு அயர் களத்து வீறுபெறத் தோன்றி,
''அளியன் தானே, முதுவாய் இரவலன்,
வந்தோன் பெரும! நின் வண்புகழ் நயந்து'' என

இனியவும் நல்லவும் நனிபல ஏத்தித்,
தெய்வம் சான்ற திறல்விளங்கு உருவின்
வான்தோய் நிவப்பின் தான்வந்து எய்தி,
அணங்குசால் உயர்நிலை தழீஇப் பண்டைத்தன்
மணம்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி

''அஞ்சல் ஓம்புமதி, அறிவல் நின் வரவு'', என
அன்புடை நன்மொழி அளைஇ, விளிவின்று,
இருள்நிற முந்நீர் வளைஇய உலகத்து
ஒருநீ ஆகத் தோன்ற, விழுமிய
பெறல் அரும் பரிசில் நல்குமதி; பலவுடன்

வேறுபல் துகிலின் நுடங்கி, அகில்சுமந்து,
ஆரம் முழுமுதல் உருட்டி வேரல்
பூவுடை அலங்குசினை புலம்பவேர் கீண்டு,
விண்பொரு நெடுவரைப் பரிதியின் தொடுத்த
தண்கமழ் அலர்இறால் சிதைய, நன்பல

ஆசினி முதுசுளை கலாவ, மீமிசை
நாக நறுமலர் உதிர, யூகமொடு
மாமுக முசுக்கலை பனிப்பப், பூநுதல்
இரும்பிடி குளிர்ப்ப வீசிப், பெருங்களிற்று
முத்துடை வான்கோடு தழீஇத் தத்துற்று.

நன்பொன் மணிநிறம் கிளரப் பொன்கொழியா,
வாழை முழுமுதல் துமியத் தாழை,
இளநீர் விழுக்குலை உதிரத் தாக்கிக்,
கறிக்கொடிக் கருந்துணர் சாயப் பொறிப்புற
மடநடை மஞ்ஞை பலவுடன் வெரீஇக்,

கோழி வயப்பெடை இரியக், கேழலொடு
இரும்பனை வெளிற்றின் புன்சாய் அன்ன
குருஉமயிர் யாக்கைக் குடாவடி உளியம்
பெருங்கல் விடர் அளைச் செறியக், கருங்கோட்டு
ஆமா நல்ஏறு சிலைப்பச் சேண்நின்று

இழுமென இழிதரும் அருவிப்
பழமுதிர் சோலை மலைகிழ வோனே!

திருமுருகாற்றுப்படை முற்றிற்று.



## நேரிசை வெண்பாக்கள்

குன்றம் எறிந்தாய், குரைகடலில் சூர் தடிந்தாய்,
புன்தலைய பூதப் பொருபடையாய்,–என்றும்
இளையாய், அழகியாய், ஏறூர்ந்தான் ஏறே,
உளையாய், என் உள்ளத்து உறை. (1)

குன்றம் எறிந்ததுவும், குன்றப்போர் செய்ததுவும்,
அன்றங்கு அமரிடர் தீர்த்ததுவும்,–இன்று என்னைக்
கைவிடா நின்றதுவும், கல்பொதும்பில் காத்ததுவும்
மெய்விடா வீரன்கை வேல். (2)

வீரவேல், தாரைவேல், விண்ணோர் சிறைமீட்ட
தீரவேல், செவ்வேள் திருக்கைவேல்,–வாரி
குளித்தவேல், கொற்றவேல், சூர்மார்பும் குன்றும்
தொளைத்தவேல் உண்டே துணை. (3)

இன்னம் ஒருகால் எனது இடும்பைக் குன்றுக்கும்
கொன்னவில் வேல் சூர்தடிந்த கொற்றவா—முன்னம்
பனிவேய் நெடுங்குன்றம் பட்டு உருவத் தொட்ட
தனிவேலை வாங்கத் தகும். (4)

உன்னை ஒழிய ஒருவரையும் நம்புகிலேன்;
பின்னை ஒருவரையான் பின்செல்லென்,—பன்னிருகைக்
கோலப்பா, வானோர் கொடியவினை தீர்த்து அருளும்
வேலப்பா, செந்திவாழ்வே, (5)

அஞ்சு முகம்தோன்றில் ஆறுமுகம் தோன்றும்;
வெஞ்சமரில் அஞ்சலென வேல்தோன்றும்;—நெஞ்சில்
ஒருகால் நினைக்கில், இருகாலும் தோன்றும்;
முருகா என்று ஓதுவார் முன். (6)

முருகனே! செந்தில் முதல்வனே! மாயோன்
மருகனே! ஈசன் மகனே!—ஒருகைமுகன்
தம்பியே! நின்னுடைய தண்டைக்கால் எப்பொழுதும்
நம்பியே கைதொழுவேன் நான். (7)

காக்கக் கடவிய நீ காவாது இருந்தக்கால்,
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா?—பூக்கும்
கடம்பா! முருகா! கதிர்வேலா! நல்ல
இடங்காண் இரங்காய் இனி. (8)

பரங்குன்றில் பன்னிருகைக் கோமான்தன் பாதம்
கரங்கூப்பிக் கண்குளிரக் கண்டு—சுருங்காமல்,
ஆசையால் நெஞ்சே, அணிமுருகாற் றுப்படையைப்
பூசையாக் கொண்டே புகல். (9)

நக்கீரர் தாம் உரைத்த நன்முருகாற்றுப் படையைத்
தற்கோல நாள்தோறும் சாற்றினால்—முற்கோல
மாமுருகன் வந்து, மனக்கவலை தீர்த்தருளித்
தான் நினைத்த எல்லாம் தரும். (10)



ஓம் சரவணபவ

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளிய

# திருச்செந்தூர் கந்தர் கலிவெண்பா

பூமேவு செங்கமலப் புத்தேளும் தேறரிய
பாமேவு தெய்வப் பழமறையும் – தேமேவும்
நாதமும் நாதாந்த முடிவும் நவைதீர்ந்த
போதமும் காணாத போதமாய் – ஆதிநடு (4)

அந்தம் கடந்தநித்தி யானந்த போதமாய்ப்
பந்தம் தணந்த பரஞ்சுடராய் – வந்த
குறியும் குணமுமொரு கோலமுமற்று எங்கும்
செறியும் பரம சிவமாய் – அறிவுக்கு (8)

அநாதியாய் ஐந்தொழிற்கும் அப்புறமாய் அன்றே
மனாதிகளுக்கு எட்டா வடிவாய்த் – தனாதருளின்
பஞ்சவித ரூப பரசுகமாய் எவ்வுயிர்க்கும்
தஞ்சமென நிற்கும் தனிப்பொருளாய் – எஞ்சாத (12)

பூரணமாய் நித்தமாய்ப் போக்குவரவும் புணர்வும்
காரணமும் இல்லாக் கதியாகித் – தாரணியில்
இந்திரசாலம் புரிவோன் யாரையும் தான்மயக்கும்
தந்திரத்தில் சாராது சார்வதுபோல் – முந்தும் (16)

கருவின்றி நின்ற கருவாய் அருளே
உருவின்றி நின்ற உருவாய் – திரிகரணம்
ஆகவரும் இச்சை அறிவு இயற்ற லால்இலய
போகஅதி காரப் பொருளாகி – ஏகத்து (20)

உருவும் அருவும் உருஅருவும் ஆகிப்
பருவ வடிவம் பலவாய் – இருள் மலத்துள்
மோகமுறும் பல்லுயிர்க்கு முத்தி அளித் தற்குமல
பாகமுறவே கடைக்கண் பாலித்துத் – தேகமுறத் (24)

தந்த அருவுருவம் சார்ந்தவிந்து மோகினிமான்
பெந்த முறவே பிணிப்பித்து – மந்த்ரமுதல்
ஆறத்து வாவும் அண்டத்து ஆர்ந்த அத்து வாக்களும்முற்
கூறத் தகும் சிமிழ்ப்பில் கூட்டுவித்து – மாறிவரும் (28)

ஈரிரண்டு தோற்றத்து எழுபிறப்புள் யோனி என்பான்
ஆரவந்த நான்குநூ றாயிரத்துள் – தீர்வரிய
கன்மத்துக்கு ஈடாய்க் கறங்கும் சகடமும்போல்
சென்மித்து உழலத் திரோதித்து – வெந்நிரய (32)

சொர்க்காதி போகமெலாம் துய்ப்பித்துப் பக்குவத்தால்
நற்காரணம் சிறிது நண்ணுதலும் – தர்க்கமிடும்
தொன்னூல் பரசமயம் தோறும் அதுவதுவே
நன்னூல் எனத்தெரிந்து நாட்டுவித்து – முன்னூல் (36)

விரதமுத லாயபல மெய்த்தவத்தின் உண்மைச்
சரியைகிரி யாயோகம் சார்வித்து – அருள்பெருகு
சாலோக சாமீப சாரூபமும் புசிப்பித்து
ஆலோகம் தன்னை அகற்றுவித்து – நால்வகையாம் (40)

சந்திநி பாதம் தருதற்கு இருவினையும்
ஒத்துவரும் காலம் உளவாகிப் – பெத்த
மலபரி பாகம் வருமளவில் பன்னாள்
அலமருதல் கண்ணுற்று அருளி – உலவாது (44)

அறிவுக்கு அறிவாகி அவ்வறிவுக்கு எட்டா
நெறியில் செறிந்தநிலை நீங்கிப் – பிரியாக்
கருணைத் திருஉருவாய்க் காசினிக்கே தோன்றிக்
குருபரனென்று ஓர்திருப்பேர் கொண்டு – திருநோக்கால் (48)

ஊழ்வினையைப் போக்கி உடலறுபத் தெட்டுநிலம்
ஏழும் அத்துவாக்கள் இருமூன்றும் – பாழாக
ஆணவமான படலம் கிழித்து அறிவில்
காணரிய மெஞ்ஞானக் கண்காட்டிப் – பூணும் (52)

அடிஞானத் தாற்பொருளும் ஆன்மாவும் காட்டிக்
கடியார் புவனமுற்றும் காட்டி – முடியாது
தேக்குபர மானந்தத் தெள்ளமுதம் – ஆகிளங்கும்
நீக்கமற நின்ற நிலைகாட்டிப் – போக்கும் (56)

வரவும் நினைப்பும் மறப்பும் பகலும்
இரவும் கடந்து உலவா இன்பம் – மருவித்துக்
கன்மமலத் தார்க்குமலர்க் கண்மூன்றும் தாழ்சடையும்
வன்மழுவும் மானுமுடன் மால்விடைமேல் மின்னிடத்துப் (60)

பூத்த பவளப் பொருப்பு ஒன்று வெள்ளிவெற்பில்
வாய்த்தனைய தெய்வ வடிவாகி – மூத்த
கருமமலக் கட்டறுத்துக் கண்ணருள் செய்து உள்நின்று
ஒருமலத்தார்க்கு இன்பம் உதவிப்பெருகியெழு (64)

மூன்றவத்தையும் கழற்றி முத்தருட னேஇருத்தி
ஆன்றபர முத்தி அடைவித்துத் – தோன்றவரும்
யானெனதென்று அற்றஇடமே திருவடியா
மோனபேரா னந்தம் முடியாக – ஞானம். (68)

திருஉருவா இச்சை செயலறிவு கண்ணா
அருளதுவே செங்கை அலரா – இருநிலமே
சந்நிதியா நிற்கும் தனிச்சுடரே; எவ்வுயிர்க்கும்
பின்னமற நின்ற பெருமானே – மின்னருவம் (72)

தோய்ந்த நவரத்னச் சுடர்மணியால் செய்த பைம்பொன்
வாய்ந்த கிரண மணிமுடியும் – தேய்ந்தபிறைத்
துண்டம் இரு மூன்றுநிரை தோன்றப் பதித்தனைய
புண்டரம் பூத்தநுதல் பொட்டழகும் – விண்ட (76)

பருவமலர்ப் புண்டரிகம் பன்னிரண்டு பூத்தாங்கு
அருள் பொழியும் கண்மலர் ஈராறும் – பரிதி
பலவும் எழுந்துசுடர் பாலித்தாற் போலக்
குலவு மகரக் குழையும் – நிலவுமிழும் (80)

புன்முறுவல் பூத்தலர்ந்த பூங்குமுதச் செவ்வாயும்
சென்மவிடாய்தீர்க்கும் திருமொழியும் வின்மலிதோள்
வெவ்வசுரர் போற்றிசைக்கும் வெஞ்சூரனைத்தடிந்து
தெவ்வருயிர் சிந்தும் திருமுகமும் எவ்வுயிர்க்கும் (84)

ஊழ்வினையை மாற்றி உலவாத பேரின்ப
வாழ்வுதரும் செய்ய மலர்முகமும் – சூழ்வோர்
வடிக்கும் பழமறைகள் ஆகமங்கள் யாவும்
முடிக்கும் கமல முகமும் – விடுத்தகலாப் (88)

பாச இருள் துரந்து பல்கதிரில் சோதிவிடும்
வாச மலர்வதன மண்டலமும் நேசமுடன்
போகமுறும் வள்ளிக்கும் புத்தேளிர் பூங்கொடிக்கும்
மோகம் அளிக்கும் முகமதியும் – தாகமுடன் (92)

வந்தடியில் சேர்ந்ததோர் மகிழ வரம்பலவும்
தந்தருளும் தெய்வமுகத் தாமரையும் – கொத்தவிழ்ந்த
வேரிக் கடம்பும் விரைக்குரவும் பூத்தலர்ந்த
பாரப் புயசயிலம் பன்னிரண்டும் – ஆரமுதம் (96)

தேவர்க்கு உதவும் திருக்கரமும் சூர்மகளிர்
மேவக் குழைந்தணைந்த மென்கரமும் – ஓவாது
மாரி பொழிந்த மலர்க்கரமும் பூந்தொடையல்
சேர அணிந்த திருக்கரமும் – மார்கபத்தில் (100)

வைத்த கா வதலமும் வாமமருங் கிற்கரமும்
உய்த்த குறங்கில் ஒருகரமும் – மொய்த்த
சிறுதொடிசேர் கையும்மணி சேர்ந்ததடங் கையும்
கறுவுசமர் அங்குசம்சேர் கையும் – தெறுபோர் (104)

அதிர்கே டகம் சுழற்றும் அங்கைத் தலமும்
கதிர்வாள் விதிர்க்கும் கரமும் – முதிராத
கும்பமுலைச் செவ்வாய்க் கொடியிடையார் வேட்டணைந்த
அம்பொன் மணிப்பூண் அகன்மார்பும் – பைம்பொன் (108)

புரிநூலும் சுண்டிகையும் பூம்பட்டுடையும்
அரைஞாணும் கச்சை அழகும் – திருவரையும்
நாதக் கழலும் நறுமணிப்பொற் கிண்கிணியும்
பாதத்து அணிந்த பரிபுரமும் – சோதி (112)

இளம் பருதி நூறா யிரங்கோடி போல
வளந்தரு தெய்வீக வடிவும் – உளந்தனில்கண்டு
ஆதரிப்போர்க்கு ஆருயிராய் அன்பரகத் தாமரையின்
மீதிருக்கும் தெய்வ விளக்கொளியே ஓதியஐந்து (114)

ஓங்காரத்து உள்ளொளிக்கும் உள்ளொளியாய் ஐந்தொழிற்கும்
நீங்காத பேருருவாய் நின்றோனே – தாங்கரிய
மந்திரமே சோரியா வான்பதமே மாமுடியாத்
தொந்தமுறும் வன்னமே தொக்காகப் பந்தனையால் (120)

ஒத்த புவனத் துருவே உரோமமாத்
தத்துவங்களே சத்த தாதுவா – வைத்த
கலையே அவயவமாக் காட்டும் மத்து வாவின்
நிலையே வடிவமா நின்றோய் – பலகோடி (124)

அண்டம் உருவாகி அங்கம் சராசரமாய்க்
கண்ட சக்தி மூன்றுட் காரணமாய்த் தொண்டுபடும்
ஆவிப் புலனுக்கு அறிவு அளிப்ப ஐந்தொழிலும்
ஏவித் தனி நடத்தும் எங்கோவே – மேவ (128)

வரும் அட்ட மூர்த்தமாம் வாழ்வேமெய்ஞ் ஞானம்
தரும் அட்டயோகத் தவமே – பருவத்து
அகலாத பேரன்பு அடைந்தோர் அகத்துள்
புகலாகும் இன்பப் பொருப்பும் – சுகலளிதப் (132)

பேரின்ப வெள்ளப் பெருக்காறு மீதானம்
தேரின்ப நல்கும் திருநாடும், பாரின்பம்
எல்லாம் கடந்த இருநிலத்துட் போக்குவரவு
அல்லாது உயர்ந்த அணிநகரும் தொல்லுலகில் (136)

ஈறும் முதலுமகன்று எங்குநிறைந்து ஐந்தெழுத்தைக்
கூறி நடத்தும் குரகதமும், ஏறுமதம்
தோய்ந்து களித்தோர் துதிக்கையினால் பஞ்சமலம்
காய்ந்த சிவஞானக் கடாக்களிறும் வாய்ந்தசிவ. (140)

பூரணத்துள் பூரணமாம் போதம் புதுமலரா
நரகத்துள் கட்டு நறுந்தொடையும் காரணத்துள்
ஐந்தொழிலும் ஓவாது அளித்துயர்த்த வான்கொடியும்
வந்தநவ நாத மணிமுரசும்; சந்ததமும் (144)

நீக்கமின்றி ஆடி நிழலசைப்பான் போல்புவனம்
ஆக்கி அசைத்தருளும் ஆணையும் தேக்கமழ்ந்து
வீசும் பனுவல் விபுதர் தனித்தனியே
பேசும் தசாங்கமெனப் பெற்றோனே தேசுதிகழ் (148)

பூங்கயிலை வெற்பிற் புனைமலர்ப்பூங் கோதையிடப்
பாங்குறையும் முக்கண் பரஞ்சோதி – ஆங்கொருநாள்
வெந்தகுவர்க்கு ஆற்றாத விண்ணோர் முறைக்கிரங்கி
ஐந்து முகத்தோடு அதோமுகமும் – தந்து (152)

திருமுகங்கள் ஆறாகிச் செந்தழற்கண் ஆறும்
ஒருமுகமாய்த் தீப்பொறியாறு உய்ப்ப விரிபுவனம்
எங்கும் பரக்க இமையோர் கண்டு அஞ்சுதலும்
பொங்கும் தழல்பிழம்பைப் பொற்கரத்தால் அங்கண். (156)

எடுத்தமைத்து வாயுவைக்கொண்டு ஏகுதியென்று எம்மான்
கொடுத்தளிப்ப மெல்லக் கொடுப்போய் அடுத்ததொரு
பூதத் தலைவகொடு போதி எனத் தீக்கடவுள்
சீதப் பகீரதிக்கே சென்றுய்ப்பப் – போதொருசற்று (160)

அன்னவளும் கொண்டமைதற்கு ஆற்றாள் சரவணத்தில்
சென்னியில் கொண்டு உய்ப் பத்திரு உருவாய் முன்னர்
அறுமீன் முலையுண்டு அழுதுவிளை யாடி
நறுநீர் முடிக்கணிந்த நாதன் – குறுமுறுவல் (164)

கன்னியொடும் சென்று அவட்குக் காதலுருக் காட்டுதலும்
அன்னவள் கண்டு அவ்வுருவம் ஆறினையும் – தன்னிரண்டு
கையால் எடுத்தணைத்துக் கந்தனெனப் பேர்புனைந்து
மெய்யாறும் ஒன்றாக மேவுவித்துச் – செய்ய (168)

முகத்தில் அணைத்துஉச்சி மோந்து முலைப்பால்
அகத்துள் மகிழப்பூத்து அளித்துச் சகத்தளந்த
வெள்ளை விடைமேல் விமலன் கரத்தில் அளித்து
உள்ளம் உவப்ப உயர்ந்தோனே – கிள்ளைமொழி! (172)

மங்கை சிலம்பின் மணி ஒன்ப தில்தோன்றும்
துங்க மடவார் துயர்தீர்ந்து – தங்கள்
விருப்பால் அளித்தநவ வீரருக்குள் முன்னோன்
மருப்பாயும் தார்வீர வாகு – நெருப்பிலுதித்து (176)

அங்கண் புவனம் அனைத்தும் அழித்துலவும்
செங்கண் கடா அதனைச் சென்றுகொணர்ந்து – எங்கோன்
விடுக்குதி என்று உய்ப்ப அதன் மீதிவர்ந்து எண்திக்கும்
நடத்தி விளையாடு நாதா படைப்போன் (180)

அகந்தை உரைப்பமறை ஆதி எழுத்தொன்று
உகந்த பிரணவத்தின் உண்மை புகன்றிலையால்
சிட்டித் தொழிலதனைச் செய்வதெங்ஙன் என்றுமுனம்
குட்டிச் சிறையிலிருத்தும் கோமானே – மட்டவிழும் (184)

பொன்னம் கடுக்கைப் புரிசடையோன் போற்றிசைப்ப
முன்னம் பிரமம் மொழிந்தோனே பொன்னெடுவேல்
தாரகனும் மாயத் தடங்கிரியும் தூளாக
வீரவடி வேல் விடுத்தோனே சீரலைவாய்த் (188)

தெள்ளு திரை கொழிக்கும் செந்தூரில் போய்க்கருணை
வெள்ளம் எனத்தவிசின் வீற்றிருந்து – வெள்ளைக்
கயேந்திரனுக்கு அஞ்சல் அளித்துக் கடல்சூழ்
மயேந்திரத்தில் புக்கு இமையோர் வாழச் சயேந்திரனாம் (192)

சூரனைச் சோதித்துவருக வென்றுதடந் தோள்விசய
வீரனைத் தூதாக விடுத்தோனே – காரவுணன்
வானவரை விட்டு வணங்காமை யால்கொடிய
தானவர்கள் நாற்படையும் சங்கரித்துப் – பானு (196)

பகைவன் முதலாய பாலருடன் சிங்க
முகனைவென்று வாகை முடித்தோய் – சகமுடுத்த
வாரிதனில் புதிய மாவாய்க் கிடந்தநெடும்
சூருடலம் கீண்ட சுடர் வேலோய் – போரவுணன் (200)

அங்கம் இரு கூறாய் அடன்மயிலும் சேவலுமாய்த்
துங்கமுடன் ஆர்த்தெழுந்து தோன்றுதலும் – அங்கவற்றுள்
சீறும் அர வைப்பொருத சித்ரமயில் வாகனமா
ஏறி நடாத்தும் இளையோனே – மாறிவரு (204)

சேவல் பகையைத் திறல்சேர் பதாகை என
மேவத் தனித்துயர்த்த மேலோனே – மூவர்
குறைமுடித்து விண்ணம் குடியேற்றித் தேவர்
சிறைவிடுத்து ஆட்கொண்டு அளித்ததேவே – மறைமுடிவாம்

சைவக்கொழுந்தே தவக்கடலே வானுதவும்
தெய்வக் களிற்றை மணம்செய்தோனே – பொய்விரவு
காம முனிந்த கலைமுனிவன் கண்ணருளால்
வாமமட மானின் வயிற்றுதித்துப் – பூமருவு (212)

கானக் குறவர் களிகூரப் பூங்குயில்போல்
ஏனற் புனங்காத்து இனிதிருந்து – மேன்மைபெறத்
தெள்ளித் தினைமாவும் தேனும் பரிந்தளித்த
வள்ளிக் கொடியை மணந்தோனே – உள்ளம் உவந்து. (216)

ஆறுதிருப்பதிகண்டு ஆறெழுத்தும் அன்பினுடன்
கூறு மவர் சிந்தைகுடி கொண்டோனே – நறுமலர்க்
கந்திப் பொதும்பர் எழு காரலைக்கும் சீரலைவாய்ச்
செந்திப் பதிபுரக்கும் செவ்வேளே – சந்ததமும் (220)

பல்கோடி சன்மப் பகையும் அவமிருத்தும்
பல்கோடி விக்கினமும் பல்பிணியும் – பல்கோடி
காதகமும் செய்வினையும் பாம்பும் பிசாசும்அடல்
பூதமும்தீ நீரும் பொருபடையும் – தீது அகலா (224)

வெவ்விடமும் துட்ட மிருகமுதலாம் எவையும்
எவ்விடம்வந்து எம்மை எதிர்த்தாலும் – அவ்விடத்தில்
பச்சைமயில் வாகனமும் பன்னிரண்டு திண்தோளும்
அச்சம் அகற்றும் அயில்வேலும் – கச்சைத் (228)

திருவரையும் சீறடியும் செங்கையும் ஈராறு
அருள்விழியும் மாமுகங்கள் ஆறும் – விரிகிரணம்
சிந்தப் புனைந்த திருமுடிகள் ஓராறும்
எந்தத் திசையும் எதிர்தோன்ற – வந்திடுக்கண் (232)

எல்லாம் பொடிபடுத்தி எவ்வரமும் தந்துபுகுந்து
உல்லாசமாக உளத்திருந்து – பல்விதமாம்
ஆசுமுதல் நாற்கவியும் அட்டாவ தானமும் சீர்ப்
பேசும் இயல் பல்காப் பியத் தொகையும் – ஓசை (236)

எழுத்துமுத லாம் ஐந்து இலக்கணமும் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமை பாலித்து ஒழுக்கமுடன்
இம்மைப் பிறப்பில் இருவாதனை அகற்றி
மும்மைப் பெருமலங்கள் மோசித்துத் தம்மைவிடுத்து (240)

ஆயும் பழைய அடியாருடன் கூட்டித்
தோயும் பரபோகம் துய்ப்பித்துச் சேய
கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி ஆட்கொண்டு
அடியேற்கு முன்னின்று அருள். (244)

**திருச்செந்தூர் கந்தர் கலிவெண்பா முற்றிற்று.**



ஓம் சரவணபவ

திருவருட் பிரகாச வள்ளல் பெருமான் அருளிய

# தெய்வமணி மாலை

காமவுள் பகைவனும் கோபவெங் கொடியனும்
கனலோப முழுமுடனும்
கடுமோக வீணனும் கொடுமதம் எனும் துட்ட
கண்கெட்ட ஆங்காரியும்

ஏமமாறு மாச்சாரிய விழலனும் கொலையென்(று)
இயம்பு பாதகனுமா இவ்
எழுவரும், இவர்க்குற்ற உறவான பேர்களும்
எனைப்பற்றி டாமல் அருள்வாய்

சேமமிகு மாமறையின் ஓமெனும் அருட்பதத்
திறனருளி, மலய முனிவன்
சிந்தனையின் வந்தனை உவந்த மெய்ஞ் ஞானசிவ
தேசிக சிகா ரத்னமே

தாமமொளிர் சென்னையிற் கந்தகோட்டத்துள்வளர்
தலமோங்கும் கந்த வேளே
தண்முகத் துய்யமனி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே.

எத்திக்கும் என்னுளம் தித்திக்கும் இன்பமே
என்னுயிர்க்கு உயிராகும் ஓர்
ஏகமே ஆனந்த போகமே யோகமே
என்பெருஞ்செல்வமே, நன்

முத்திக்கு முதலான முதல்வனே மெய்ஞ்ஞான
மூர்த்தியே, முடிவிலாத
முருகனே நெடியமால் மருமகனே சிவபிரான்
முத்தாடும் அருமை மகனே

பத்திக்(கு) உவந்துஅருள் பரிந்தருளும் நின்னடிப்
பற்(று) அருளி, என்னை இந்தப்

படியிலே உழல்கின்ற குடியிலே ஒருவனாப்
பண்ணாமல், ஆண்டருளுவாய்

சத்திக்கும் நீர்ச் சென்னை கந்த கோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே.

நீருண்டு பொழிகின்ற காருண்டு விளைகின்ற
நிலனுண்டு பலனும் உண்டு
நிதியுண்டு துதியுண்டு மதியுண்டு கதிகொண்ட
நெறியுண்டு நிலையும் உண்டு

ஊருண்டு பேருண்டு மணியுண்டு பணியுண்டு
உடையுண்டு கொடையும் உண்டு
உண்டுண்டு மகிழவே உணவுண்டு சாந்தமுறும்
உளமுண்டு வளமும் உண்டு

தேருண்டு கரியுண்டு பரியுண்டு மற்றுள்ள
செல்வங்கள் யாவும் உண்டு
தேனுண்டு வண்டுறு கடம் பணியும் நின்பதத்
தியானம் உண்டாயில் அரசே

தாருண்ட சென்னையிற் கந்தக் கோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே.

ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற
உத்தமர்தம் உறவு வேண்டும்
உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசுவார்
உறவு கலவாமை வேண்டும்

பெருமைபெறும் நினதுபுகழ் பேசவேண்டும் பொய்மை
பேசா திருக்க வேண்டும்

பெருநெறி பிடித்தொழுக வேண்டும் மதமானபேய்
பிடியா திருக்க வேண்டும்.

மருவுபெண் ஆசையை மறக்கவே வேண்டும்உனை
மறவா திருக்க வேண்டும்
மதிவேண்டும் நின்கருணை நிதிவேண்டும் நோயற்ற
வாழ்வில் நான் வாழ வேண்டும்

தருமமிகு சென்னையிற் கந்தகோட்டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே.

ஈயென்று நானொருவர் இடம்நின்று கேளாத
இயல்பும், என்னிடம் ஒருவர் ஈது
இடுவென்ற போதவர்க்(கு) இலையென்று சொல்லாமல்
இடுகின்ற திறமும், இறையாம்

நீயென்று எனைவிடா நிலையும், நான், என்றும் உன்
தனை விடா நெறியும், அயலார்
நிதியொன்றும் நயவாத மனமும், மெய்ந் நிலையென்றும்
நெகிழாத திடமும், உலகிற்

சீயென்று பேயென்று நாயென்று பிறர்தமைத்
தீங்குசொல் லாத தெளிவும்
திறமொன்று வாய்மையுந் தூய்மையுந் தந்துநின்
திருவடிக்(கு) ஆளாக்குவாய்

தாயென்று சென்னையிற் கந்தகோட்டத்துள்வளர்
தலமோங்கு கந்த வேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வமணியே.



ஓம் சரவணபவ

## பாம்பன் ஸ்ரீ குமரகுருதாச சுவாமிகள் அருளிய

# சண்முக கவசம்

### அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்

அண்டமாய் அவனி யாகி அறியொணாப் பொருளதாகித்
தொண்டர்கள் குருவு மாகித் துகளறு தெய்வமாகி
எண்திசை போற்ற நின்ற என்னருள் ஈசனான
திண்திறல் சரவணத்தான் தினமுமென் சிரசைக் காக்க. (1)

ஆதியாங் கயிலைச் செல்வன் அணிநெற்றி தன்னைக் காக்க
தாதவிழ் கடப்பந் தாரான் தானிரு நுதலைக் காக்க
சோதியாந் தணிகை யீசன் துரிசிலா விழியைக் காக்க
நாதனாங் கார்த்திகேயன் நாசியை நயந்து காக்க. (2)

இரு செவிகளையுஞ் செவ்வேள் இயல்புடன் காக்க வாயை
முருகவேள் காக்க நாப்பல் முழுதுநற் குமரன் காக்க
துரிசறு கதுப்பை யானைத் துண்டனார் துணைவன் காக்க
திருவுடன் பிடரி தன்னைச் சிவசுப்ரமணியன் காக்க. (3)

ஈசனாம் வாகுலேயன் எனது கந்தரத்தைக் காக்க
தேசுறு தோள்விலாவுந் திருமகள் மருகன் காக்க
ஆசிலா மார்பை யீரா றாயுதன் காக்க என்றன்
ஏசிலா முழங்கை தன்னை யெழிற்குறிஞ்சிக்கோன் காக்க. (4)

உறுதியாய் முன்கை தன்னை உமையிள மதலை காக்க
தறுகணே றிடவே யென்கைத் தலத்தைமா முருகன் காக்க
புறங்கையை அயிலோன் காக்க பொறிக்கரவிரல்கள் பத்தும்
பிறங்குமால் மருகன் காக்க பின்முதுகைச்சேய் காக்க. (5)

ஊன்நிறை வயிற்றை மஞ்ஞை ஊர்தியோன் காக்க வம்புத்
தோள்நிமிர் சுரேசன் உந்திச் சுழியினைக் காக்க குய்ய
நாணினை அங்கி கௌரி நந்தனன் காக்க பீஜ
ஆணியைக் கந்தன் காக்க அறுமுகன் குதத்தைக் காக்க. (6)

எஞ்சிடா திடுப்பை மேலுக் கிறைவனார் காக்க காக்க
அஞ்சகனம் ஓரிரண்டும் அரன் மகன் காக்க காக்க
விஞ்சிடு பொருட்காங்கேயன் விளரடித் தொடையைக் காக்க
செஞ்சரநேச ஆசான் திமிருமுன் தொடையைக் காக்க. (7)

ஏரகத் தேவன் என்தாள் இருமுழங்காலுங் காக்க
சீருடைக் கணைக்கால் தன்னைச் சீரலை வாய்த்தே காக்க
நேருடைப் பரடி ரண்டும் நிகழ் பரங்கிரியன் காக்க
சீரிய குதிக்கால் தன்னைத் திருச்சோலை மலையன் காக்க. (8)

ஐயுறு மலையன் பாதத்தமர் பத்து விரலுங் காக்க
பையுறு பழநி நாத பரண் அகங்காலைக் காக்க
மெய்யுடல் முழுதும் ஆதி விமல சண்முகவன் காக்க
தெய்வநாயக விசாகன் தினமுமென் நெஞ்சைக் காக்க. (9)

ஒலியெழ வுரத்த சத்தத் தொடுவரு பூதப்ரேதம்
பலிகொள் இராக்கதப் பேய் பலகணத் தெவையானாலும்
கிலிகொள் எனைவேல் காக்க கெடுப்பார் செய்யுஞ் சூன்யம்
வலியுள மந்த்ர தந்த்ரம் வருத்திடா தயில்வேல் காக்க. (10)

ஓங்கிய சீற்றமே கொண்டு வணிவில் வேல்சூலங்கள்
தாங்கிய தண்டம் எஃகந் தடிபரசு ஈட்டி யாதி
பாங்குடை ஆயுதங்கள் பகைவர்என் மேலே யோச்சின்
தீங்குசெய்யாமலென்னைத் திருக்கைவேல் காக்க காக்க. (11)

ஔவிய முளர் ஊனுண்போர்அசடர்பேய் அரக்கர் புல்லர்
தெவ்வர்கள் எவரானாலும் திடமுடன் எனைமற் கட்டத்
தவ்வியே வருவாராயிற் சராசர மெலாம் புரக்குங்
கவ்வுடைச் சூர சண்டன் கைஅயில் காக்க காக்க. (12)

கடுவிடப் பாந்தள் சிங்கங் கரடி, நாய், புலி, மாயானை
கொடியகோள் நாய், குரங்கு கோலமார்ச் சாலஞ் சம்பு
நடையுடை யெதனாலேனும் நானிடற்ப் பட்டிடாமல்
சடிதியில் வடிவேல் காக்க சானவி முனைவேல் காக்க. (13)

ஙகரமே போல்த ழீஇ ஞானவேல் காக்க வன்புள்
சிகரிதேள் நண்டுக் காலி செய்யனே றாலப் பல்லி
நகமுடை யோந்தி பூரான் நளிவண்டு புலியின் பூச்சி
உகமிசை யிவையால் எற்கோர் ஊறிலா தைவேல் காக்க. (14)

சலத்திலும் வன்மீனேறு தண்டுடைத் திருக்கை மற்றும்
நிலத்திலுஞ் சலத்திலுந்தான் நெடுந்துயர் தரற்கே யுள்ள
குலத்தினால் நான் வருத்தங் கொண்டிடா தவ்வவ் வேளை
பலத்துடனிருந்து காக்க பாவகி கூர்வேல் காக்க. (15)

ஞமலியம் பரியன் கைவேல் நவக்கிரகக் கோள் காக்க
சுமவிழி நோய்கள் தந்த சூலையாக் கிராண ரோகம்
திமிர்கழல வாதஞ் சோகை சிரமடி கர்ண ரோகம்
எமையணு காமலே பன்னிரு புயன் சயவேல் காக்க. (16)

டமருகத் தடிபோல் நைக்குந் தலையடி கண்ட மாலை
குமுறுவிப் புறுதி குன்மங் குடல்வலி யீழை காசம்
நிமிரொணா திருத்தும் வெட்டை நீர்ப்பிர மேகம் எல்லாம்
எமையுடையாம லேகுன் றெறிந்தவன் கைவேல் காக்க. (17)

இணக்கமில்லாத பித்த எரிவுமா சுரங்கள் கைகால்
முணக்கவே குறைக்குங் குஷ்டம் மூலவெண் முளைதீ மந்தம்
சணத்திலே கொல்லுஞ் சன்னி சாலமென் றறையு மிந்தப்
பிணிக்குலமெனையா ளாமல் பெருஞ்சத்திவடிமேல் காக்க. (18)

தவனமா ரோகம் வாதஞ் சயித்தியம் அரோச கம்மெய்
சுவறவே செய்யும் மூலச் சூடிளைப் புடற்று விக்கல்
அவதிசெய் பேதி கீழ்நோயண்ட வாதங்கள் சூலை
எவையுமேன் னிடத்தெய் தாமலெம்பிரான் திணிவேல் காக்க. (19)

நமைப்பறு கிரந்தி வீக்கம் நணுகிடு பாண்டு சோபம்
அமர்திடு கருமை வெண்மை ஆகுபல் தொழுநோய் காக்க
இமைக்குமுன் னுறுவலிப்போ டெழுபுடைப் பகந்த ராதி
இமைப்பொழுதேனு மென்னை யெய்தாம லருள்வேல் காக்க. (20)

பல்லது கடித்து மீசை படபடென் றேதுடிக்கக்
கல்லினும் வலிய நெஞ்சம் காட்டியே யுருட்டி நோக்கி
எல்லினும் கரிய மேனி யெமபடர் வரினு மென்னை
ஒல்லையில் தார காரி ஓம் ஐம் ரீம் வேல் காக்க. (21)

மண்ணிலும் மரத்தின் மீதும் மலையிலும் நெருப்பின் மீதும்
தண்ணிறை ஜலத்தின் மீதும் சாரிசெய் யூர்தி மீதும்
விண்ணிலும் பிலத்தினுள்ளும் வேறெந்த யிடத்தும் என்னை
நண்ணிவந் தருளார் சஷ்டி நிதன்வேல் காக்க காக்க. (22)

யகரமே போற்சூ லேந்தும் நறும்புயன் வேல்முன் காக்க
அகரமே முதலாம் ஈராறு அம்பகன் வேல்பின் காக்க
சகரமோ டாறு மானோன் தன்கைவேல் நடுவிற் காக்க
சிகரமின் தேவ மோலி திகழஐவேல் கீழ்மேல் காக்க. (23)

ரஞ்சித மொழி தேவானை நாயகன் வள்ளி பங்கன்
செஞ்சய வேல் கிழக்கில் திறமுடன் காக்க அங்கி
விஞ்சிடு திசையின் ஞான வீரன்வேல் காக்க தெற்கில்
எஞ்சிடாக் கதிர்கா மத்தோன் இகலுடைக் கரவேல் காக்க. (24)

லகரமே போல்கா ளிங்கன் நல்லுடல் நெளிய நின்று
தகரமர்த் தனமே செய்த சங்கரி மருகன் கைவேல்
நிகழெனை நிருதி திக்கில் நிலைபெறக் காக்க மேற்கில்
இகலயில் காக்க வாயு வினில்குகன் கதிர்வேல் காக்க. (25)

வடதிசை தன்னில் ஈசன் மகன் அருள் திருவேல் காக்க
விடையுடை யீசன் திக்கில் வேத போதகன்வேல் காக்க
நடக்கையில் இருக்கு ஞான்றும் நவில்கையில் நிமிர்கையில் கீழ்க்
கிடக்கையில் தூங்குஞான்றுகிரி துளைத் துளவேல் காக்க. (26)

இழந்துபோகாத வாழ்வை ஈயுமுந் தையனார் கைவேல்
வழங்குநல் ஊண் போது மால்விளையாட்டின் போதும்
பழஞ்சுரர் போற்றும் பாதம் பணிந்து நெஞ்சடங்கும் போதும்
செழுங்குணத் தோடே காக்க திடமுடன் மயிலும் காக்க. (27)

இளமையில் வாலி பத்தில் ஏறிடு வயோதி கத்தில்
வளர் அறு முகச்சிவன் தான் வந்தெனைக் காக்க
ஒளியெழு காலை முன் னெல்ஓம்சிவ சாமி காக்க
தெளிநடு பிற்ப கற்கால் சிவகுரு நாதன் காக்க. (28)

இறகுடைக் கோழித் தோகைக் கிறைமுன் இராவிற் காக்க
திறல் உடைச் சூர்ப்ப கைத்தேத் திகழ்பின் இராவிற் காக்க
நறவுசேர தாள் சிலம்பன் நடுநிசி தன்னில் காக்க
மறைதொழு குழகன் எம்கோன் மாறாது காக்க காக்க. (29)

இனமெனத் தொண்ட ரோடும் இணங்கிடும் செட்டி காக்க
தனிமையில் கூட்டந் தன்னில் சரவண பவனார் காக்க
நனியனுபூதி சொன்ன நாதர்க் கோன் காக்க வித்தைக்
கனிவொடு சொன்னதாசன் கடவுள் தான் காக்க வந்தே. (30)

சண்முக கவசம் முற்றிற்று.



பாம்பன் ஸ்ரீ குமரகுருதாச சுவாமிகள் அருளிய

## பகைக் கடிதல்

திருவளர் சுடருருவே, சிவைகரம் அமருருவே,
அருமறை புகழுருவே, அறவர்கள் தொழுமுருவே,
இருள் தரும்ஒளி யுருவேயென நினை என தெதிரே
குருமுகன் முதன் மயிலே, கொணர்தியுன் இறைவனையே. (1)

மறைபுகழ் இறைமுனரே, மறைமுதல் பகருருவே,
பொறைமலி யுலகுருவே, புனநடை தருமுருவே
இறைஉள முகஉருவே, எனநினை எனது எதிரே
குறைவுறு திருமயிலே, கொணர்தியுன் இறைவனையே. (2)

இதரர்கள் பலர்பொரவே, இவணுறை எனதெதிரே,
மதிரவி பலவெனதேர், வளர்சரணி டையெனமா,
கதுரோடு வருமயிலே தடவரை யசைஉறவே,
குதிதரு மொருமயிலே, கொணர்தியுன் இறைவனையே. (3)

பவநடை மனுடர்முனே படருறும் மென்தெதிரே
நவமணி நுதலணியேர் நகைபல மிடறு அணிமால்,
சிவணிய திருமயிலே, திடனொடு நொடிவலமே
குவலயம் வருமயிலே கொணர்தியுன் இறைவனையே. (4)

அழகுறு மலர்முகனே, அமரர்கள் பணிகுகனே
மருவுரு உடையவனே, மதினனி பெரியவனே
இழ விலர் இறையவனே, யெனநினை யெனதெதிரே
குழகது மிளிர்மயிலே, கொணர்தியுன் இறைவனையே. (5)

இணையறு மறுமுகனே இதசசிமருமகனே
இணரணி புரள்புயனே னெனநினை யெனதெதிரே,
கணபன வரவுரமே, கலைவுரெலமு தருமோர்
குணமுறு மணிமயிலே, கொணர்தியுன் இறைவனையே. (6)

எளியவ, என்இறைவ, குகா என நினை எனதெதிரே,
வெளிநிகழ் திரள்களை மீன்மிளிர்சினை யெனமிடைவான்
பளபள யெனமினுமா பலசிறை விரிதருநீள்
குளிர்மணி விழிமயிலே கொணர்தியுன் இறைனையே. (7)

இலகயில் மயில்முருகா, வெனநினை யெனதெதிரே,
பலபல களமணியே, பலபல பதமணியே
கலகல கலவெனமா கவினொடு வரும் மயிலே
குலவிடு சிகைமயிலே, கொணர்தியுன் இறைவனையே. (8)

இகலறு சிவகுமார, யெனநினை யெனதெதிரே
சுகமுனிவரர் எழிலார், சுரர்பலர் புகழ்செயவே,
தொகுதொரு தொகுவெனவே சுரநட மிடும்மயிலே
குகபதி அமர்மயிலே கொணர்தியுன் இறைவனையே. (9)

கருணைபெய் கனமுகிலே, கடமுனி பணி முதலே
அருணைய னரனெனவே யகம்நினை என தெதிரே
மருமலர் அணிபலவே, மருவிடும் களமயிலே
குருபல அவிர்மயிலே கொணர்தியுன் இறைவனையே. (10)

**பகைக் கடிதல் முற்றிற்று.**



பாம்பன் ஸ்ரீ குமரகுருதாச சுவாமிகள் அருளிய

# குமாரஸ்தவம்

| | | | | |
|---|---|---|---|---|
| ஓம் | ஷண்முக | பதயே | நமோ | நமః |
| ஓம் | ஷண்மத | பதயே | நமோ | நமః |
| ஓம் | ஷட்க்ரீவ | பதயே | நமோ | நமః |
| ஓம் | ஷட்கிரீட | பதயே | நமோ | நமః |
| ஓம் | ஷட்கோண | பதயே | நமோ | நமః |
| ஓம் | ஷட்கோச | பதயே | நமோ | நமః |
| ஓம் | நவநிதி | பதயே | நமோ | நமః |
| ஓம் | சுபநிதி | பதயே | நமோ | நமః |
| ஓம் | நரபதி | பதயே | நமோ | நமః |
| ஓம் | சுரபதி | பதயே | நமோ | நமః |
| ஓம் | நடச்சிவ | பதயே | நமோ | நமః |
| ஓம் | ஷடக்ஷர | பதயே | நமோ | நமః |
| ஓம் | கவிராஜ | பதயே | நமோ | நமః |
| ஓம் | தபராஜ | பதயே | நமோ | நமః |
| ஓம் | இகபர | பதயே | நமோ | நமః |
| ஓம் | புகழ்முநி | பதயே | நமோ | நமః |
| ஓம் | ஜயஜய | பதயே | நமோ | நமః |
| ஓம் | நயநய | பதயே | நமோ | நமః |
| ஓம் | மஞ்சுள | பதயே | நமோ | நமః |
| ஓம் | குஞ்சரீ | பதயே | நமோ | நமః |
| ஓம் | வல்லீ | பதயே | நமோ | நமః |
| ஓம் | மல்ல | பதயே | நமோ | நமః |
| ஓம் | அஸ்த்ர | பதயே | நமோ | நமః |
| ஓம் | சஸ்த்ர | பதயே | நமோ | நமః |
| ஓம் | ஷஷ்டி | பதயே | நமோ | நமః |
| ஓம் | அபேத | பதயே | நமோ | நமః |
| ஓம் | சுபோத | பதயே | நமோ | நமః |
| ஓம் | (வ்)வியூஹ | பதயே | நமோ | நமః |
| ஓம் | மயூர | பதயே | நமோ | நமః |
| ஓம் | பூத | பதயே | நமோ | நமః |

| | | | |
|---|---|---|---|
| ஓம் வேத | பதயே | நமோ | நமঃ |
| ஓம் புராண | பதயே | நமோ | நமঃ |
| ஓம் ப்ராண | பதயே | நமோ | நமঃ |
| ஓம் பக்த | பதயே | நமோ | நமঃ |
| ஓம் முக்த | பதயே | நமோ | நமঃ |
| ஓம் அகார | பதயே | நமோ | நமঃ |
| ஓம் உகார | பதயே | நமோ | நமঃ |
| ஓம் மகார | பதயே | நமோ | நமঃ |
| ஓம் விகாச | பதயே | நமோ | நமঃ |
| ஓம் ஆதி | பதயே | நமோ | நமঃ |
| ஓம் பூதி | பதயே | நமோ | நமঃ |
| ஓம் அமார | பதயே | நமோ | நமঃ |
| ஓம் குமார | பதயே | நமோ | நமঃ |

குமாரஸ்தவம் முற்றிற்று.



## முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்

உண்ணெகிழ் தொண்டர் உள்ளத்திரு சிந்திட
ஒளிவிடு முழுமணியே! உயர்மறை நூல்கலை
முடிவின் முடிந்திடும் ஒழுகொளி மரகதமே!

விண்ணொடு மண்ணை விழுங்கி அருட்கதிர்
விரியும் இளஞ்சுடரே! மெய்ப்புலன் மேய்ந்து
சமைந்தொரு வீட்டை விளக்கும் விளக்கொளியே!

புண்ணிய நாறுமொர் பெண்கனி கனியும்
புனித நறுங்கனியே! புள்ளூர் எனஎம
துள்ளத் தடநிறை புத்தமு தக்கடலே!

தண்ணொளி பொங்கிய கருணை நிதியே!
தாலோ! தாலேலோ! சங்கத் தமிழின்
தலைமைப் புலவா தாலோ! தாலேலோ!



ஓம் சரவணபவ

# அஷ்டோத்தரங்கள்

## ஸ்ரீ ஸுப்ரம்ஹண்ய அஷ்டோத்தரம்

ஓம் ஸ்கந்த$_3$ாய நம:
ஓம் கு$_3$ஹாய நம:
ஓம் ஷண்முகாய நம:
ஓம் ப$_2$ாலநேத்ரஸுதாய நம:
ஓம் ப்ரப$_4$வே நம:
ஓம் பிங்க$_3$ளாய நம:
ஓம் க்ருத்திகா ஸூநவே நம:
ஓம் ஶிகி$_2$வாஹநாய நம:
ஓம் த்$_3$விஷட் பு$_4$ஜாய நம:
ஓம் த்$_3$விஷண்ணேத்ராய நம: (10)
ஓம் சக்தி த$_4$ராய நம:
ஓம் பிஶிதாஶ ப்ரப$_4$ஞ்ஜநாய நம:
ஓம் தாரகாஸுர ஸம்ஹாராய நம:
ஓம் ரக்ஷோப$_3$ல விமர்த$_3$நாய நம:
ஓம் மத்தாய நம:
ஓம் ப்ரமத்தாய நம:
ஓம் உந்மத்தாய நம:
ஓம் ஸுரஸைந்ய ஸுரக்ஷகாய நம:
ஓம் தேவஸேநாபதயே நம:
ஓம் ப்ராக்ஞாய நம: (20)
ஓம் க்ருபாளவே நம:
ஓம் ப$_4$க்த வத்ஸலாய நம:
ஓம் உமா ஸுதாய நம:
ஓம் சக்தித$_4$ராய நம:
ஓம் குமாராய நம:
ஓம் க்ரௌஞ்சத$_3$ாரணாய நம:

ஓம் ஸேநாந்யே நம:
ஓம் அக்$_3$நிஜந்மநே நம:
ஓம் விஶாகாய நம:
ஓம் சங்கராத்மஜாய நம: (30)
ஓம் ஶிவஸ்வாமிநே நம:
ஓம் க$_3$ணஸ்வாமிநே நம:
ஓம் ஸர்வஸ்வாமிநே நம:
ஓம் ஸநாதநாய நம:
ஓம் அநந்த சக்தயே நம:
ஓம் அக்ஷோப்$_4$யாய நம:
ஓம் பார்வதீ ப்ரியநந்த$_3$நாய நம:
ஓம் க$_3$ங்க$_3$ா ஸுதாய நம:
ஓம் ஶரோத் பூ$_4$தாய நம:
ஓம் ஆஹுதாய நம: (40)
ஓம் பாவகாத்மஜாய நம:
ஓம் ஜ்ரும்ப$_4$ாய நம:
ஓம் ப்ருஜ்ரும்ப$_4$ாய நம:
ஓம் உஜ்ரும்ப$_4$ாய நம:
ஓம் கமலாஸந ஸம்ஸ்துதாய நம:
ஓம் ஏகவர்ணாய நம:
ஓம் த்$_3$வி வர்ணாய நம:
ஓம் திரி வர்ணாய நம:
ஓம் ஸுமநோஹாராய நம:
ஓம் சதுர்வர்ணாய நம: (50)
ஓம் பஞ்சவர்ணாய நம:
ஓம் ப்$_3$ரஜாபதயே நம:
ஓம் அஹஸ்பதயே நம:
ஓம் அக்$_3$நிக$_3$ர்ப$_4$ாய நம:
ஓம் ஶமீக$_3$ர்ப$_4$ாய நம:
ஓம் விஶ்வ ரேதஸே நம:

ஓம் ஸுராரிக்நே நம:
ஓம் ஹரித்3வர்ணாய நம:
ஓம் ஶுப4கராய நம:
ஓம் வடவே நம: (60)
ஓம் வடுவேஷப்4ருதே நம:
ஓம் பூஷ்ணே நம:
ஓம் கப4ஸ்திநே நம:
ஓம் க3ஹநாய நம:
ஓம் சந்த்3ரவர்ணாய நம:
ஓம் கலாத4ராய நம:
ஓம் மாயாத4ராய நம:
ஓம் மஹாமாயிநே நம:
ஓம் கைவல்யாய நம:
ஓம் ஶங்கரீஸுதாய நம: (70)
ஓம் விஶ்வயோநயே நம:
ஓம் அமேயாத்மநே நம:
ஓம் தேஜோ நித4யே நம:
ஓம் அநாமயாய நம:
ஓம் பரமேஷ்டிநே நம:
ஓம் பரப்3ரஹ்மணே நம:
ஓம் வேத3க3ர்ப4ாய நம:
ஓம் விராட்ஸுதாய நம:
ஓம் புளிந்த3 கந்யா ப4ர்த்ரே நம:
ஓம் மஹாஸாரஸ்வதா வ்ருதாய நம: (80)
ஓம் ஆஶ்ரிதாகி2ல தா3த்ரேநம:
ஓம் சோரக்4நாய நம:
ஓம் ரோக3 நாஶநாய நம:
ஓம் அநந்த மூர்த்தயே நம:
ஓம் ஆநந்த3ாய நம:
ஓம் ஶிக2ண்டிநே நம:

ஓம் க்ருதகேதநாய நம:
ஓம் ட$_3$ம்ப$_4$ாய நம:
ஓம் பரமட$_3$ம்ப$_4$ாய நம:
ஓம் மஹாமட$_3$ம்ப$_4$ாய நம: (90)
ஓம் வ்ருஷாகபயே நம:
ஓம் காரணோபாத்த தே$_3$ஹாய நம:
ஓம் காரணாதீத விக்ரஹாய நம:
ஓம் அநீஶ்வராய நம:
ஓம் அம்ருதாய நம:
ஓம் ப்ராணாய நம:
ஓம் ப்ராணாயாம பராயணாய நம:
ஓம் விருத்த ஹந்த்ரே நம:
ஓம் வீரக்$_3$நாய நம:
ஓம் ரக்தஶ்யாம க$_3$ளாய நம: (100)
ஓம் ஸுப்$_3$ரஹ்மண்யாய நம:
ஓம் கு$_3$ஹ ப்ரீதாய நம:
ஓம் ப்$_3$ரஹ்மண்யாய நம:
ஓம் ப்$_3$ராஹ்மண ப்ரியாய நம:
ஓம் வம்ஶவிருத்தி$_3$கராய நம:
ஓம் வேத$_3$ வேத்$_3$யாய நம:
ஓம் அக்ஷய பலப்ரத$_3$ாய நம: (108)

**ஸ்ரீ ஸுப்ரம்ஹண்யாஷ்டோத்தர**
**ஶத நாமாவளி ஸம்பூர்ணம்**

## ஸ்ரீ விக்நேஶ்வராஷ்டோத்தரம்

ஓம் விநாயகாய நம:
ஓம் விக்$_4$நராஜாய நம:
ஓம் கெ$_3$ளரீ புத்ராய நம:
ஓம் க$_3$ணேஶ்வராய நம:

ஓம் ஸ்கந்தா3க்3ரஜாய நமஃ
ஓம் அவ்யயாய நமஃ
ஓம் பூ4தாய நமஃ
ஓம் த3க்ஷாய நமஃ
ஓம் அத்3யக்ஷாய நமஃ
ஓம் த்3விஜப்ரியாய நமஃ (10)
ஓம் அக்3நிக3ர்ப்4ச்சி2தே நமஃ
ஓம் இந்த்3ர ஸ்ரீப்ரத3ாய நமஃ
ஓம் வாணீப்ரத3ாய நமஃ
ஓம் அவ்யயாய நமஃ
ஓம் ஸர்வஸித்தி3ப்ரத3ாய நமஃ
ஓம் ஶர்வதநயாய நமஃ
ஓம் ஶர்வரீப்ரியாய நமஃ
ஓம் ஸர்வாத்மகாய நமஃ
ஓம் ஸ்ருஷ்டிகர்த்ரே நமஃ
ஓம் தே3வாய நமஃ (20)
ஓம் அநேகார்ச்சிதாய நமஃ
ஓம் ஶிவாய நமஃ
ஓம் ஶுத்த3ாய நமஃ
ஓம் புத்3தி4ப்ரியாய நமஃ
ஓம் ஶாந்தாய நமஃ
ஓம் ப்3ரஹ்மசாரிணே நமஃ
ஓம் க3ஜாநநாய நமஃ
ஓம் த்3வைமாத்ரேயாய நமஃ
ஓம் முநிஸ்துத்யாய நமஃ
ஓம் ப4க்தவிக்3ந விநாஶநாய நமஃ (30)
ஓம் எகத3ந்தாய நமஃ
ஓம் சதுர்ப3ாஹவே நமஃ
ஓம் சதுராய நமஃ
ஓம் ஶக்திஸம்யுக்தாய நமஃ

ஓம் லம்போ$_3$த$_3$ராய நமஃ
ஓம் ஶூர்ப்பகர்ணாய நமஃ
ஓம் ஹரயே நமஃ
ஓம் ப்$_3$ரஹ்மவிது$_3$த்தமாய நமஃ
ஓம் காலாய நமஃ
ஓம் க்$_3$ரஹபதயே நமஃ (40)
ஓம் காமிநே நமஃ
ஓம் ஸோமஸூர்யாக்$_3$நி லோசநாய நமஃ
ஓம் பாஶாங்குஶத$_4$ராய நமஃ
ஓம் சண்டாய நமஃ
ஓம் குணாதீதாய நமஃ
ஓம் நிரஞ்ஜநாய நமஃ
ஓம் அகல்மஷாய நமஃ
ஓம் ஸ்வயம்ஸித்$_3$தா$_3$ய நமஃ
ஓம் ஸித்$_3$தா$_3$ர்ச்சித பதா$_3$ம்புஜாய நமஃ
ஓம் பீ$_3$ஜாபூரப$_2$லாஸக்தாய நமஃ (50)
ஓம் வரதா$_3$ய நமஃ
ஓம் ஶாஶ்வதாய நமஃ
ஓம் க்ருதிநே நமஃ
ஓம் த்விஜப்ரியாய நமஃ
ஓம் வீதப$_4$யாய நமஃ
ஓம் க$_3$திநே நமஃ
ஓம் சக்ரிணே நமஃ
ஓம் இக்ஷுசாபத்$_4$ருதே நமஃ
ஓம் ஸ்ரீ தா$_3$ய நமஃ
ஓம் அஜாய நமஃ (60)
ஓம் உத்ப$_2$லகராய நமஃ
ஓம் ஸ்ரீ பதயே நமஃ
ஓம் ஸ்துதிஹர்ஷிதாய நமஃ
ஓம் குலாத்$_3$ரிபே$_4$த்ரே நமஃ

ஓம் ஜடிலாய நமஃ

ஓம் கலிகல்மஷ நாஶநாய நமஃ

ஓம் சந்த்ரசூட$_3$ாமணயே நமஃ

ஓம் காந்தாய நமஃ

ஓம் பாபஹாரிணே நமஃ

ஓம் ஸமாஹிதாய நமஃ (70)

ஓம் ஆஶ்ரிதாய நமஃ

ஓம் ஶ்ரீகராய நமஃ

ஓம் ஸௌம்யாய நமஃ

ஓம் ப$_4$க்தவாஞ்சித த$_3$ாயகாய நமஃ

ஓம் ஶாந்தாய நமஃ

ஓம் கைவல்யஸுக$_2$தாய நமஃ

ஓம் ஸச்சித$_3$ாநந்த$_3$ விக்$_3$ரஹாய நமஃ

ஓம் ஞாநிநே நமஃ

ஓம் த$_3$யாயுத$_3$ாய நமஃ

ஓம் தாந்தாய நமஃ (80)

ஓம் ப்$_3$ரஹ்மத்$_3$வேஷ விவர்ஜிதாய நமஃ

ஓம் ப்ரமத்த தை$_3$த்ய ப$_4$யத$_3$ாய நமஃ

ஓம் ஶ்ரீ கண்ட$_2$ாய நமஃ

ஓம் விபு$_3$தே$_4$ஶ்வராய நமஃ

ஓம் ராமார்சிதாய நமஃ

ஓம் வித$_4$யே நமஃ

ஓம் நாக$_3$ராஜ யஜ்ஞோப வீதவதே நமஃ

ஓம் ஸ்தூலகண்ட்ட$_2$ாய நமஃ

ஓம் ஸ்வயம்கர்த்ரே நமஃ

ஓம் ஸாமகே$_3$ாஷ ப்ரியாய நமஃ (90)

ஓம் பரஸ்மை நமஃ

ஓம் ஸ்தூல துண்ட$_4$ாய நமஃ

ஓம் அக்$_3$ரண்யே நமஃ

ஓம் தீ$_4$ராய நமஃ

ஓம் வாகீ$_3$ஶாய நமஃ
ஓம் ஸித்$_3$தி$_4$தா$_3$யகாய நமஃ
ஓம் தூ$_3$ர்வாபில்வ ப்ரியாய நமஃ
ஓம் அவ்யக்தமூர்த்தயே நமஃ
ஓம் அத்$_4$புதமூர்த்திமதே நமஃ
ஓம் ஶைலேந்தி$_3$ர தநுஜோத் ஸங்க கேலநோத் ஸுகமாநஸாய நமஃ
ஓம் ஸ்வலாவண்ய ஸுதா$_4$ஸார ஜித மந்மதவி$_3$க்ரஹாய நமஃ
ஓம் ஸமஸ்த ஜகதா$_3$தா$_4$ராய நமஃ
ஓம் மாயிநே நமஃ
ஓம் மூஷிகவாஹநாய நமஃ
ஓம் ஹ்ருஷ்டாய நமஃ
ஓம் துஷ்டாய நமஃ
ஓம் ப்ரஸந்நாத்மநே நமஃ
ஓம் ஸர்வஸித்$_3$தி$_4$ ப்ரதா$_3$யகாய நமஃ (108)

ஸ்ரீ விக்நேஶ்வராஷ்டோத்தர ஶத நாமாவளி ஸம்பூர்ணம்



# ஸ்ரீ கணேச அஷ்டோத்தரம்

ஓம் கஜாநநாய நமஃ
ஓம் க$_3$ணாத்$_4$யக்ஷாய நமஃ
ஓம் விக்$_4$நராஜாய நமஃ
ஓம் விநாயகாய நமஃ
ஓம் த்$_3$வைமாதுராய நமஃ
ஓம் ஸுமுகா$_2$ய நமஃ
ஓம் ப்ரமுகா$_2$ய நமஃ
ஓம் ஸந்முகா$_2$ய நமஃ
ஓம் க்ருதிநே நமஃ
ஓம் ஜ்ஞாநதீ$_3$பாய நமஃ (10)
ஓம் ஸுக$_2$நித$_4$யே நமஃ
ஓம் ஸுராத்$_4$யக்ஷாய நமஃ

ஓம் ஸூராரிபி$_4$தே நம:
ஓம் மஹாக$_3$ணபதயே நம:
ஓம் மாந்யாய நம:
ஓம் மஹந்மாந்யாய நம:
ஓம் ம்ருடா$_3$த்மஜாய நம:
ஓம் புராணாய நம:
ஓம் புருஷாய நம:
ஓம் பூஷ்ணே நம: (20)
ஓம் புஷ்கரிணே நம:
ஓம் புண்யக்ருதே நம:
ஓம் அக்$_3$ரக$_3$ண்யாய நம:
ஓம் அக்$_3$ரபூஜ்யாய நம:
ஓம் அக்$_3$ரகா$_3$மிநே நம:
ஓம் மந்த்ரக்ருதே நம:
ஓம் சாமீகரப்ரபா$_4$ய நம:
ஓம் ஸர்வஸ்மை நம:
ஓம் ஸர்வோபாஸ்யாய நம:
ஓம் ஸர்வகர்த்ரே நம: (30)
ஓம் ஸர்வநேத்ரே நம:
ஓம் ஸர்வஸித்$_3$தி$_3$ப்ரதா$_3$ய நம:
ஓம் ஸர்வஸித்$_3$தா$_4$ய நம:
ஓம் ஸர்வவந்த்$_3$யாய நம:
ஓம் மஹாகாலாய நம:
ஓம் மஹாப$_3$லாய நம:
ஓம் ஹேரம்பா$_3$ய நம:
ஓம் லம்ப$_3$ ஜட$_2$ராய நம:
ஓம் ஹ்ரஸ்வக்$_3$ரீவாய நம:
ஓம் மஹோத$_3$ராய நம: (40)
ஓம் மதோ$_3$த்கடாய நம:
ஓம் மஹாவீராய நம:

ஓம் மந்த்ரிணே நமஃ
ஓம் மங்கலத$_3$ாய நமஃ
ஓம் ப்ரமத$_2$ார்ச்யாய நமஃ
ஓம் ப்ராஜ்ஞாய நமஃ
ஓம் ப்ரமோத$_3$ாய நமஃ
ஓம் மோத$_3$கப்ரியாய நமஃ
ஓம் த்$_4$ருதிமதே நமஃ
ஓம் மதிமதே நமஃ (50)
ஓம் காமிநே நமஃ
ஓம் கபித்த$_2$ப்ரியாய நமஃ
ஓம் ப்$_3$ரஹ்மசாரிணே நமஃ
ஓம் ப்$_3$ரஹ்மரூபிணே நமஃ
ஓம் ப்$_3$ரஹ்மவிதே$_3$ நமஃ
ஓம் ப்$_3$ரஹ்மவந்தி$_3$தாய நமஃ
ஓம் ஜிஷ்ணவே நமஃ
ஓம் விஷ்ணுப்ரியாய நமஃ
ஓம் ப$_4$க்தஜீவிதாய நமஃ
ஓம் ஜிதமந்மத$_2$ாய நமஃ (60)
ஓம் ஐஶ்வர்யத$_3$ாய நமஃ
ஓம் கு$_3$ஹஜ்யாயஸே நமஃ
ஓம் ஸித்$_3$த$_4$ஸேவிதாய நமஃ
ஓம் விக்$_3$நஹர்த்ரே நமஃ
ஓம் விக்$_3$நகர்த்ரே நமஃ
ஓம் விஶ்வநேத்ரே நமஃ
ஓம் விராஜே நமஃ
ஓம் ஸ்வராஜே நமஃ
ஓம் ஸ்ரீபதயே நமஃ
ஓம் வாக்பதயே நமஃ (70)
ஓம் ஸ்ரீமதே நமஃ
ஓம் ஶ்ருங்க$_3$ாரிணே நமஃ

ஓம் ஶ்ரிதவத்ஸலாய நமஃ
ஓம் ஶிவப்ரியாய நமஃ
ஓம் ஶீக்$_{4}$ரகாரிணே நமஃ
ஓம் ஶாஶ்வதாய நமஃ
ஓம் சிவநந்த$_{3}$நாய நமஃ
ஓம் ப$_{3}$லோத்$_{3}$த$_{4}$தாய நமஃ
ஓம் பக்தநித$_{4}$யே நமஃ
ஓம் ப$_{4}$ாவக$_{3}$ம்யாய நமஃ (80)
ஓம் ப$_{4}$வாத்மஜாய நமஃ
ஓம் மஹதே நமஃ
ஓம் மங்களதாயிநே நமஃ
ஓம் மஹேஶாய நமஃ
ஓம் மஹிதாய நமஃ
ஓம் ஸத்யத$_{4}$ர்மிணே நமஃ
ஓம் ஸத$_{3}$ாத$_{4}$ாராய நமஃ
ஓம் ஸத்யாய நமஃ
ஓம் ஸத்யபராக்ரமாய நமஃ
ஓம் ஶூப$_{4}$ாங்க$_{3}$ாய நமஃ (90)
ஓம் ஶூப்ரதந்தாய நமஃ
ஓம் ஶூப$_{4}$த$_{3}$ாய நமஃ
ஓம் ஶூப$_{4}$விக்$_{3}$ரஹாய நமஃ
ஓம் பஞ்சபாதக நாசிநே நமஃ
ஓம் பார்வதீப்ரிய நந்த$_{3}$நாய நமஃ
ஓம் விஶ்வேசாய நமஃ
ஓம் விபு$_{3}$த$_{4}$ாராத்$_{4}$யபத$_{3}$ாய நமஃ
ஓம் வீரவராக்$_{3}$ரகாய நமஃ
ஓம் குமாரகு$_{3}$ருவந்த்$_{3}$யாய நமஃ
ஓம் குஞ்ஜராஸுர ப$_{4}$ஞ்ஜநாய நமஃ (100)
ஓம் வல்லப$_{4}$ா–வல்வப$_{4}$ாய நமஃ
ஓம் வராப$_{4}$ய–கராம்பு$_{3}$ஜாய நமஃ

ஓம் ஸுதா$_4$கலஶ ஹஸ்தாய நம:
ஓம் ஸுதா$_4$கர–கலாதா$_4$ராய நம:
ஓம் பஞ்சஹஸ்தாய நம:
ஓம் ப்ரதா$_4$நேஶாய நம:
ஓம் புராதநாய நம:
ஓம் வரஸித்$_3$தி$_4$ விநாயகாய நம: (108)

**ஸ்ரீ கணேச அஷ்டோத்தர ஶத நாமாவளி ஸம்பூர்ணம்**



# ஸ்ரீ சிவாஷ்டோத்தரம்

ஓம் ஶிவாய நம:
ஓம் மஹேஶ்வராய நம:
ஓம் ஶம்ப$_4$வே நம:
ஓம் பிநாகிநே நம:
ஓம் ஶஶிஶேக$_2$ராய நம:
ஓம் வாம தே$_3$வாய நம:
ஓம் விரூபாக்ஷாய நம:
ஓம் கபர்தி$_3$நே நம:
ஓம் நீலலோஹிதாய நம:
ஓம் ஶங்கராய நம: (10)
ஓம் ஶூலபாணயே நம:
ஓம் கட்வாங்கி$_3$நே நம:
ஓம் விஷ்ணுவல்லபா$_4$ய நம:
ஓம் ஶிபிவிஷ்டாய நம:
ஓம் அம்பி$_3$கா நாதா$_2$ய நம:
ஓம் ஸ்ரீ கண்டா$_2$ய நம:
ஓம் ப$_4$க்த வத்ஸலாய நம:
ஓம் ப$_4$வாய நம:
ஓம் ஶர்வாய நம:
ஓம் திரிலோகேஶாய நம: (20)

ஓம் ஶிதிகண்டாய நம:
ஓம் ஶிவாப்ரியாய நம:
ஓம் உக்$_3$ராய நம:
ஓம் கபாலிநே நம:
ஓம் காமாரயே நம:
ஓம் அந்த$_4$காஸுர ஸூத$_3$நாய நம:
ஓம் க$_3$ங்கா$_3$த$_4$ராய நம:
ஓம் லலாடாக்ஷாய நம:
ஓம் காலகாலாய நம:
ஓம் க்ருபாநித$_4$யே நம: (30)
ஓம் பீ$_4$மாய நம:
ஓம் பரஶுஹஸ்தாய நம:
ஓம் ம்ருக$_3$பாணயே நம:
ஓம் ஜடாத$_4$ராய நம:
ஓம் கைலாஸவாஸிநே நம:
ஓம் கவசிநே நம:
ஓம் கடோ$_2$ராய நம:
ஓம் த்ரிபுராந்தகாய நம:
ஓம் வ்ருஷாங்காய நம:
ஓம் வ்ருஷபா$_4$ரூடா$_3$ய நம: (40)
ஓம் ப$_4$ஸ்மோத்தூ$_4$ளித விக்$_3$ரஹாய நம:
ஓம் ஸாமப்ரியாய நம:
ஓம் ஸ்வரமயாய நம:
ஓம் த்ரயீமூர்த்தயே நம:
ஓம் அநீஶ்வராய நம:
ஓம் ஸர்வஜ்ஞாய நம:
ஓம் பரமாத்மநே நம:
ஓம் ஸோமஸூர்யாக்$_3$நி லோசநாய நம:
ஓம் ஹவிஷே நம:
ஓம் யக்ஞ மயாய நம: (50)

ஓம் ஸோமாய நம:
ஓம் பஞ்சவக்த்ராய நம:
ஓம் ஸத$_3$ாஶிவாய நம:
ஓம் விஶ்வேச்வராய நம:
ஓம் வீரப$_4$த்ராய நம:
ஓம் க$_3$ணநாத$_2$ாய நம:
ஓம் ப்ரஜாபதயே நம:
ஓம் ஹிரண்ய ரேதஸே நம:
ஓம் து$_3$ர்த$_4$ர்ஷாய நம:
ஓம் கி$_3$ரீஶாய நம: (60)
ஓம் கி$_3$ரிஶாய நம:
ஓம் அநக$_4$ாய நம:
ஓம் பு$_4$ஜங்க$_3$பூ$_4$ஷணாய நம:
ஓம் ப$_4$ர்க்காய நம:
ஓம் கி$_3$ரித$_4$ந்வநே நம:
ஓம் கி$_3$ரிப்ரியாய நம:
ஓம் க்ருத்தி வாஸஸே நம:
ஓம் புராராதயே நம:
ஓம் ப$_4$க$_3$வதே நம:
ஓம் ப்ரமத$_2$ாதி$_4$பாய நம: (70)
ஓம் ம்ருத்யுஞ்ஜயாய நம:
ஓம் ஸூக்ஷ்மதநவே நம:
ஓம் ஜக$_3$த்வ்யாபிநே நம:
ஓம் ஜக$_3$த்$_3$கு$_3$ரவே நம:
ஓம் வ்யோமகேஶாய நம:
ஓம் மஹாஸேந ஜநகாய நம:
ஓம் சாருவிக்ரமாய நம:
ஓம் ருத்$_3$ராய நம:
ஓம் பூ$_4$தபதயே நம:
ஓம் ஸ்த$_2$ாணவே நம: (80)

ஓம் அஹிர்பு$_3$த்$_4$ந்யாய நம:

ஓம் திக$_3$ம்ப$_3$ராய நம:

ஓம் அஷ்டமூர்த்தயே நம:

ஓம் அநேகாத்மநே நம:

ஓம் ஸாத்விகாய நம:

ஓம் ஶுத்த$_3$ விக்$_3$ரஹாய நம:

ஓம் ஶாஶ்வதாய நம:

ஓம் கண்ட$_3$பரஶவே நம:

ஓம் அஜாய நம:

ஓம் பாஶவிமோசநாய நம: (90)

ஓம் ம்ருடா$_3$ய நம:

ஓம் பஶுபதயே நம:

ஓம் தே$_3$வாய நம:

ஓம் மஹாதே$_3$வாய நம:

ஓம் அவ்யயாய நம:

ஓம் ஹரயே நம:

ஓம் பூஷத$_3$ந்தபி$_4$தே$_3$ நம:

ஓம் அவ்யக்$_3$ராய நம:

ஓம் தக்ஷாத்$_4$வரஹராய நம:

ஓம் ஹராய நம: (100)

ஓம் ப$_4$க$_3$நேத்ரபி$_4$தே$_3$ நம:

ஓம் அவ்யக்தாய நம:

ஓம் ஸஹஸ்ராக்ஷாய நம:

ஓம் ஸஹஸ்ரப$_3$தே நம:

ஓம் அபவர்க்க$_3$ப்ரதா$_3$ய நம:

ஓம் அநந்தாய நம:

ஓம் தாரகாய நம:

ஓம் பரமேஶ்வராய நம: (108)

**ஸ்ரீ சிவாஷ்டோத்தர ஶத நாமாவளி ஸம்பூர்ணம்**



ஸ்ரீஹரி:

# ஸ்ரீமந் நாராயணீயம்

## (நூறாவது தசகம்)

## பகவானைத் திருமுடி முதல் திருவடி வரை வர்ணித்தல்

காயாம்பூவைப் போல மனதைக் கவரக்கூடிய அழகிய ஓர் ஒளிப்பிழம்பை நான் என் முன் காண்கிறேன். அதனால் நான் அமிர்த ரஸத்திலே மூழ்கித் திளைக்கிறேன். அவ்வொளிப் பிழம்பின் நடுவில் பிரம்மானந்தானுபவத்தினால் மெய்ச்சிலிர்த்து நிற்கும் நாரதர் முதலிய ரிஷிகளாலும், உபநிடதங்களாகிற பெண்டிர் கூட்டங்களாலும் சூழப்பட்டுள்ள குழவிப் பருவம் முடிந்து யௌவனப் பருவம் ஆரம்பிக்கும் நிலையில் உள்ள அழகுமிக்க தங்கள் ஸ்வரூபத்தைக் காண்கிறேன். (1)

குருவாயூரப்பா! நன்கு கறுத்து விளங்குவதும், சுருள்சுருளான நுனி கொண்டதும், அடர்ந்து மாசற்று விளங்குவதுமான தங்களது குழற்கற்றை (கூந்தல்) அழகாகச் சுருட்டி மடித்துக் கட்டப்பட்டு, அதில் சூடாமணி அணியப் பெற்றமையால் மேலும் அழகுற விளங்குகிறது. (மேலும்) பற்பல வர்ணங்கள் கொண்ட மயில் தோகைகளால் சுற்றப்பட்டு, மந்தார புஷ்ப மாலைகளால் அழகுறச் செய்யப்பட்டதாகவும் காண்கிறேன். மேல்நோக்கி இடப்பட்ட வெண்மையான பளபளக்கும் திலகத்துடன் அழகுமிக்க இளஞ்சந்திரன் போன்ற நெற்றித் தடத்தையும் நான் காண்கிறேன். (2)

எங்கும் நீக்கமற நிறைந்த குருவாயூரப்பா! அருளே நிறைந்த கருணைக்கடலின் மெதுவான, மென்மையான அலைகளால் இங்குமங்கும் அசையச் செய்கின்ற புருவங்களின் அழகால் தங்களது இரு கண்களும் உள்ளத்தைக் கவர்வதாக விளங்குகின்றன. மேலும், நன்கு கறுத்து விளங்கும் இமைகளின் மயிர்களுடன் அழகாகக் காட்சியளிக்கின்றன. அகன்ற சிவந்த தாமரை மலரின் இதழ் போன்ற நீண்ட கண்களின் அழகிய கருவிழிகளின் கருணைகூர்ந்த பார்வை உலகமனைத்தையும் குளிரச் செய்கின்றன. இவ்வளவு பெருமை கொண்ட திருக்கண்களின் கடாக்ஷம் அனாதையான, போக்கற்றவனான என்மேல் விழட்டுமே? (3)

உயர்ந்து விளங்கும் மூக்குடனும், இந்திர நீலமணியால் செய்யப்பட்ட கண்ணாடி போல் விளங்கும் இரு திருக்கன்னங்களிலும் காதுகளில் அணியப்பட்ட மணி மகர குண்டலங்கள் பிரதிபலிப்பதால் அழகுற விளங்குவதும், ஒளிரும் பல்வரிசைகளோடும், கோவைப் பழம் போல் சிவந்த உதடுகளிடையே அன்பைப் பெருக்கும் புன்னகையும் கொண்டு இனிமையாக விளங்கும் (தங்களது) திருமுகம் என்னெதிரே (என் கண் முன்னே) நன்றாக விளங்கட்டும். (4)

தங்களது திருக்கரங்கள், ஒளிமிக்க ரத்தினங்கள் இழைத்த கங்கணங்கள் அணிந்தவை. உள்ளங்கைகள் சிவந்த தளிர் போன்று மென்மையானவை; கைவிரல் நகங்களோ ஒளிமிக்கவை. அவற்றால் தடவப்படுவதால் தங்கள் புல்லாங்குழல் பல நிறங்கொண்டதாக விளங்குகிறது. அப்புல்லாங்குழலைத் தாமரை போன்ற தங்கள் திருவாயில் வைத்து இனிமையான ராகங்களைத் தோற்றுவித்து உலகமனைத்தையும் மனங்குளிரச் செய்கின்றீர்கள். அவ்வினிமையான நாதப் பிரம்மமாகிற அமுதத்தால் என் இரு செவிகளையும் நனைத்தருள வேண்டுகிறேன். (5)

குருவாயூரப்பா! (தாங்கள் திருமார்பில் அணிந்துள்ள) கௌஸ்துபம் என்ற மணியிலிருந்து வெளிப்படும் காந்தியால் சிவந்து அழகுற விளங்கும் கழுத்தையும், (பிருகு முனிவருடைய திருவடிச் சின்னமான) ஸ்ரீவத்ஸம் என்ற மருவினாலும், அசைகின்ற முத்து மாலைகளாலும் அழகுற விளங்கும் திருமார்புத்தடத்தையும், அத் திருமார்புத்தடத்தே விளங்கும் பல வண்ணப்பூக்களாலும், தளிர்களாலும் கோக்கப்பட்டு வண்டுகள் வட்டமிடும் வனமாலையையும், தொங்கும் ரத்தினமாலையையும் தியானம் செய்கிறேன். (6)

குருவாயூரப்பா! தங்களுடைய திருமேனியில் பூசப்பட்டுள்ள பச்சைக் கற்பூரம், கோரோசனம், குங்குமப்பூ, கஸ்தூரி, செஞ்சந்தனம் முதலியன அடங்கிய 'பஞ்சராகம்' என்னும் சந்தனப்பூச்சின் நறுமணம் எங்கும் பரவி உலகினரைக் கவர்கின்றது. மும்மூன்றான அநேக பிரம்மாண்டங்களைத் தன் திருவயிறகத்தே வெளியே தெரியாது அடக்கிக் கொண்டிருந்தாலும் மெல்லிய கொடிபோல் தங்கள் சிற்றிடை விளங்குகின்றது. இந்திரநீலக் கல்லில் வைக்கப்பட்ட உருக்கிய தங்கம் போல் மிளிரும் பீதாம்பரம் தங்கள் அரையில் (இடையில்) பிரகாசிக்கின்றது. ஒளிமிக்க ரத்தினங்கள் இழைக்கப்பட்டுக் கிண்கிணிகள் நிறைந்து விளங்கும் அரைஞாண் இடையிலே விளங்குகிறது. அப்படிப்பட்ட தங்கள் திருமேனியைத் தியானம் செய்கிறேன். (7)

குருவாயூரப்பா! தங்களுடைய இரு துடைகளும் அழகுமிக்கவை, பருத்தவை, பளபளப்பானவை, ஸ்ரீமஹாலக்ஷ்மியின் மனதைக் களவாடுபவை. உலக மக்களை மயக்கிவிடுமே என்று அஞ்சித்தானே இரண்டு துடைகளையும் மஞ்சள் பட்டாடை உடுத்தி மறைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? தங்களை வணங்குபவர்களுக்கு (தருமம், அர்த்தம், காமம், மோட்சம் என்னும்) நான்குவித புருஷார்த்தங்களையும் வழங்குவதற்கென்றே அமைக்கப்பட்ட இரண்டு சிறுபெட்டிகள் போன்று விளங்குகின்றன தங்கள் இரு முழந்தாள்களும். முறையாகச் சீராகத்

திரண்டுருண்டு மனதைக் கவர்வன தங்கள் இரு கணுக்கால்களும். நான் அவற்றைச் சேவிக்கிறேன். (8)

குருவாயூரப்பா! தங்களது பாத சேவைதான் உயர்வற உயர்நலத்தை அளிக்கும் சிறந்த சாதனம் என்று தனது இனிய ஒலிகளால் கூறுவதுபோல் தங்களது திருவடிக் கழல்கள் ஒலிக்கின்றன. அஞ்ஞானமாகிற பெருங்கடலில் மூழ்கித் தவிக்கும் பக்தர்களின் மனமாகிற மந்திர மலையைத் தூக்கி நிறுத்தும் கூர்மாவதாரம் போன்றன தங்களது திருவடிகளின் முன் பாகம் (நுனிக்கால்கள்). உயர்ந்து, கொஞ்சம் சிவந்து காணப்படும் தங்களது திருவடி நகங்கள் சந்திரனின் நிலவு தாபத்தை (வெம்மையை)ப் போக்குவதுபோல, தம்மை வந்தடைந்த பக்த ஜனங்களின் ஆத்யாத்மிகாதி தாபத்ரயங்களையும், உள்ளக்கொதிப்பையும், மன இருளையும் அகற்றவல்லன. மங்களங்கள் அளிக்கவல்ல அப்படிப்பட்ட தங்கள் திருவடிகளின் விரல்களின் வரிசையை இடையறாது தியானம் செய்கிறேன். (9)

சர்வேசுவரா! கருணைக்கடலே! ஸ்ரீகிருஷ்ணா! குருவாயூரப்பா! தங்களது திருமேனியிலே யோகிகளான பக்த ஜனங்களுக்கு மிகமிக இனியது தங்களது திருவடிக்கமலங்களே. அது முக்தியடைந்தவர்கள் களிக்கும் இடம். அவை பக்தர்களுக்கு வேண்டியன வாரிவழங்கும் கற்பகத்தருவின் இளந்தளிர் போன்றன. அப்படிப்பட்ட தங்களது திருவடிக்கமலங்கள் எப்பொழுதும் எனது இதயத்தில் வீற்றிருந்து, எனது எல்லாத் துன்பங்களையும் போக்கிப் பரமானந்த மோட்ச செல்வத்தை அளிக்கட்டும். (10)

உலகநாதனான ஸ்ரீகுருவாயூரப்பா! தங்களுடைய பெருமைகளை நன்கு அறியாமலேயே இந்நூலில் யான் வருணித்துள்ளவைகளைத் தாங்கள் பொறுத்தருள வேண்டுகிறேன். ஆயிரத்திற்கும் அதிகமான சுலோகங்களைக் கொண்ட இந்தத் துதி நூல் படிப்போர்க்கும் கேட்போர்க்கும் தங்களது அருளை அருளுவதாக ஆகட்டும். வேதங்களிலே பிறந்த இதிகாச புராணங்களில் விளக்கப்படும் திருவிளையாடல்களின் துதிகளால் நன்கு விளங்கும் இத்துதி நூல் ஸ்ரீநாராயணனைப் பற்றியது, நாராயண பட்டதிரி என்பவரால் எழுதப்பட்டது என இரண்டு வகையாலும் 'நாராயணீயம்' எனப் பெருமையுடையதாக விளங்குகிறது. இந்நூல் இவ்வுலகத்திலுள்ள பக்தர்களுக்கு நிறைந்த ஆயுளையும் ஆரோக்கியத்தையும் சௌக்கியத்தையும் அருளட்டும். (11)



(**'ஸ்ரீமந் நாராயணீயம்'** – வெளியீடு : கீதா பிரஸ்)

॥ ஸ்ரீஹரி: ॥

# கீதா பிரஸ்ஸின் வெளியீடுகள்

## பாராயண நூல்கள்

பக்கங்கள்

1. 256 ஸ்ரீமத் பகவத்கீதை [மூலம் - தமிழ் மூலம்]
2. 256 ஸ்ரீமத் பகவத்கீதை [தமிழ் மூலம்] மற்றும் ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் [தமிழ் மூலம்]
3. 128 ஸ்ரீமத் பகவத்கீதை - பொழிப்புரை
4. 320 ஸ்ரீமத் பகவத்கீதை [மூலம்-பொழிப்புரை]
5. 192 கீதா மாதுர்யம் [பகவத்கீதை வினா-விடை]
6. 304 ஸ்ரீமத் பகவத்கீதை [மூலம் - தமிழ் மூலம் - பதவுரை - பொழிப்புரை]
7. 1056 ஸ்ரீமத் பகவத்கீதை - தத்துவவிவேசனீ [மூலம் - தமிழ் மூலம் - பதவுரை - பொழிப்புரை - விளக்கவுரை]
8. 1112 ஸ்ரீமத் பகவத்கீதை - ஸாதக ஸஞ்ஜீவநீ [மூலம் - தமிழ் மூலம் - பதவுரை - விளக்கவுரை] [1 முதல் 9 அத்தியாயங்கள்]
9. 928 [10 முதல் 18 அத்தியாயங்கள்]
10. 64 ஸ்ரீ ஹநுமாந் சாலீஸா [ஸ்ரீ அனுமன் நாற்பது] [மூலம் - பொழிப்புரை]
11. 64 ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் - தமிழ் மூலம்
12. 336 அத்யாத்ம ராமாயணம் [தமிழ் மொழிபெயர்ப்பு]
13. 304 ஸ்ரீமந் நாராயணீயம் [தமிழ் மூலம் - விளக்கவுரை]
14. 464 சுந்தர காண்டம் - ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் [தமிழ் மூலம் - மொழிபெயர்ப்பு]
15. 336 சுந்தர காண்டம் - ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் [பொழிப்புரை]
16. 288 சுந்தர காண்டம் - ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் [தமிழ் மூலம்]
17. 304 சுந்தர காண்டம் - கம்ப ராமாயணம் [பாடல்கள்]
18. 160 திருப்பாவை விளக்கம்
19. 112 பூஜை முறைகள் [ஸ்ரீவிநாயகர், ஸ்ரீமஹாலக்ஷ்மி, ஸ்ரீசரஸ்வதி]
20. 96 ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்

॥ ஸ்ரீஹரி: ॥

# கீதா பிரஸ்ஸின் வெளியீடுகள்

## பாராயண நூல்கள் (தொடர்ச்சி...)

| | பக்கங்கள் | |
|---|---|---|
| 21. | 192 | *தெய்வ ஸ்துதி மஞ்சரி [ஸ்தோத்ரத் தொகுப்பு]* |
| 22. | 160 | *தெய்வத் துதி மாலை [தமிழ் துதிப் பாடல்கள்]* |
| 23. | 64 | *திருவெம்பாவை மற்றும் திருப்பள்ளியெழுச்சி* |
| 24. | 96 | *ஸ்ரீசிவ ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம்* |
| 25. | 1088 | **ஸ்ரீசிவ மகாபுராணம் (தமிழ் மொழிபெயர்ப்பு)** |

## ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

**(தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு) (ஐந்து பாகங்கள்)**

| | | |
|---|---|---|
| 26. | 1056 | *முதல் பாகம் [பால காண்டம் - அயோத்தியா காண்டம்]* |
| 27. | 768 | *இரண்டாவது பாகம் [ஆரண்ய காண்டம் - கிஷ்கிந்தா காண்டம்]* |
| 28. | 464 | *மூன்றாவது பாகம் [சுந்தர காண்டம்]* |
| 29. | 864 | *நான்காவது பாகம் [யுத்த காண்டம்]* |
| 30. | 512 | *ஐந்தாவது பாகம் [உத்தர காண்டம்]* |

## ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

**(தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு) (இரண்டு பாகங்கள்)**

| | | |
|---|---|---|
| 31. | 768 | *முதல் பாகம் [பால - அயோத்தியா - ஆரண்ய - கிஷ்கிந்தா காண்டம்]* |
| 32. | 784 | *இரண்டாவது பாகம் [சுந்தர - யுத்த - உத்தர காண்டம்]* |

## ஸ்ரீமத் பாகவத மகாபுராணம்

**(தமிழ் மூலம் – மொழிபெயர்ப்பு) (மூன்று பாகங்கள்)**

| | | |
|---|---|---|
| 33. | 832 | *முதல் பாகம் [ஒன்று முதல் நான்காவது ஸ்கந்தம் வரை]* |
| 34. | 768 | *இரண்டாவது பாகம் [ஐந்து முதல் ஒன்பதாவது ஸ்கந்தம் வரை]* |
| 35. | 1024 | *மூன்றாவது பாகம் [பத்து முதல் பன்னிரண்டாவது ஸ்கந்தம் வரை]* |



॥ ஸ்ரீஹரி: ॥

# கீதா பிரஸ்ஸின் வெளியீடுகள்

## அறிவுரை நல்கும் நூல்களில் சில

| | பக்கங்கள் | |
|---|---|---|
| 1. | 96 | பயனுள்ள கதைகள் |
| 2. | 96 | பசுப் பராமரிப்பின் நற்பயன்கள் - கதைகள் |
| 3. | 96 | கர்ம ரஹஸ்யம் |
| 4. | 72 | கீதை கற்பதன் பயன்கள் & ஸத்யத்தைச் சரணடைவதால் முக்தி |
| 5. | 176 | குடும்பத்தில் எப்படி இருக்க வேண்டும்? |
| 6. | 64 | சரணாகதி |
| 7. | 96 | பகவான் ஸ்ரீகிருஷ்ணன் [கதைகள்] |
| 8. | 80 | பக்தராஜ ஹனுமான் |
| 9. | 32 | சாவித்திரி-சத்தியவான் [கதைப் பகுதி] |
| 10. | 96 | ஸ்ரீகிருஷ்ணனின் நண்பரான உத்தவரின் கதை |
| 11. | 96 | பகவான் உறையும் ஐந்து இடங்கள் [கதைப் பகுதி] |
| 12. | 64 | சுசீலா - ஓர் லட்சியப் பெண்மணி |
| 13. | 96 | நள-தமயந்தி [கதைப் பகுதி] |
| 14. | 96 | பல்சுவைக் கதைகள் |
| 15. | 64 | மஹாத்மா விதுரர் |
| 16. | 128 | மஹான்களுடைய அமுத மொழிகள் |
| 17. | 128 | மஹான்களின் மணிமொழிகள் |
| 18. | 128 | மஹான்களின் சீரிய உபதேசம் |
| 19. | 128 | ஆயிரம் அமுதத் துளிகள் |
| 20. | 96 | நாட்டின் இன்றைய நிலையும், அதன் விளைவுகளும் |
| 21. | 64 | கீதையின் பெருமையை விளக்கும் கதைகள் |
| 22. | 125 | உண்மையான சுகம் |
| 23. | 96 | பக்த சரித்திரம் |
| 24. | 80 | சாதனை நெறி |
| 25. | 176 | இராமாயணத்தில் சில முக்கிய பாத்திரங்கள் |
| 26. | 160 | மஹாபாரதத்தில் சில முக்கிய பாத்திரங்கள் |
| 27. | 144 | செயல்கள் அனைத்தும் பகவானுக்கே |
| 28. | 144 | பகவானை நேரில் காண்பதற்கான வழி |
| 29. | 144 | பக்தியோகத்தின் பெருமை |
| 30. | 96 | விதுர நீதி |

|| Shri Hari ||

## SOME OF OUR ENGLISH PUBLICATIONS

| Code No. | |
|---|---|
| 457 | **Shrimad Bhagavadgita – Tattva-Vivechani** (With Sanskrit Text, Translation and Detailed Commentary) [By Shri Jayadayal Goyandka] |
| 1081 1082 | **Shrimad Bhagavadgita – Sadhaka-Sanjivani** (With Sanskrit Text, Transliteration, Translation and Detailed Commentary) [By Shri Swami Ramsukhdas] Set of two volumes |
| 455 | **Shrimad Bhagavadgita** [Sanskrit Text and English Translation] Pocket Size |
| 534 | **Shrimad Bhagavadgita** [Sanskrit Text and English Translation] [Hard Bound Edition] Pocket Size |
| 1223 | **Shrimad Bhagavadgita** – Roman Gita [Sanskrit Text, Transliteration and English Translation] |
| 1528 | **Hanuman Chalisa** (Roman) (Pocket Size) |
| 452 453 | **Shrimad Valmiki-Ramayana** [With Sanskrit Text and English Translation] Set of two volumes |
| 456 | **Shri Ramacharitamanasa** [With Hindi Text & English Translation] |
| 786 | **Shri Ramacharitamanasa** (Medium Size) |
| 1318 | **Shri Ramacharitamanasa** (With Hindi Text Transliteration, Roman Transliteration and English Translation) |
| 564 565 | **Shrimad Bhagavata** [With Sanskrit Text and English Translation] Set of two volumes |
| 1159 1160 | **Shrimad Bhagavata Mahapuranam** [English Translation only] Set of two volumes |
| 1391 | **The Bhagavadgita** (Sanskrit Text and English Translation) Pocket Size |
| 1411 | **Gita Roman** (Sanskrit Text, Transliteration and English Translation) Book Size |



|| Shri Hari ||

## SOME OF OUR ENGLISH PUBLICATIONS

### By SHRI JAYADAYAL GOYANDKA

| Code No. | |
|---|---|
| 477 | Gems of Truth [Vol. I] |
| 478 | Gems of Truth [Vol II] |
| 479 | Sure Steps to God-Realization |
| 480 | Instructive Eleven Stories |
| 481 | Way to Divine Bliss |
| 482 | What is Dharma? What is God? |
| 520 | Secret of Jnana Yoga |
| 521 | Secret of Prem Yoga |
| 522 | Secret of Karma Yoga |
| 523 | Secret of Bhakti Yoga |
| 1125 | Five Divine Abodes |
| 1245 | Some Exemplary Characters of the Mahabharata |
| 1284 | Some Ideal Characters of amayana |
| 1285 | Moral Stories |
| 1501 | Real Love |

### By SHRI HANUMAN PRASAD PODDAR

| | |
|---|---|
| 483 | Turn to God |
| 484 | Look Beyond the Veil |
| 485 | Path to Divinity |
| 486 | Wavelets of Bliss & the Divine Message |
| 620 | The Divine Name and Its Practice |
| 622 | How to Attain Eternal Happiness? |



|| Shri Hari ||

# SOME OF OUR ENGLISH PUBLICATIONS

## By SHRI SWAMI RAMSUKHDAS

| Code No. | |
|---|---|
| 471 | Benedictory Discourses |
| 472 | How to Lead A Household Life |
| 473 | Art of Living |
| 474 | Be Good |
| 476 | How to be Self-Reliant |
| 497 | Truthfulness of Life |
| 498 | In Search of Supreme Abode |
| 552 | Way to Attain the Supreme Bliss |
| 562 | Ancient Idealism for Modernday Living |
| 570 | Let us Know the Truth |
| 619 | Ease in God–Realization |
| 621 | Invaluable Advice |
| 634 | God is Everything |
| 638 | Sahaj Sadhana |
| 669 | The Divine Name |
| 1406 | Gita Madhurya |
| 1407 | The Drops of Nectar |
| 1413 | All is God |
| 1438 | Discovery of Truth and Immortaility |
| 1470 | For Salvation of Mankind |

## SPECIAL EDITIONS

| | |
|---|---|
| 494 | **The Immanence of God** [By Shri Madan Mohan Malaviya] |
| 783 | **Abortion Right or Wrong? You Decide.** [By Shri Gopi Nath Agrawal] |
| 808 | **Nava Durga** [Story with the Picture] |
| 1414 | **The Story of Mira Bai** (Shri Bankery Behari) |
| 1491 | **Mohan** (Story with the Picture) |
| 1492 | **Rama Lala** (Story with the Picture) |